# ஞானசம்பந்தம்

மலர் 11]  நந்தனஞூ ஆனிமீ 10—7—52.  [இதழ் 8

திருச்செந்தூர்



செந்திலாண்டவன் கோயில்
(மேலக்கோபுரம்)

ஆசிரியர் : நாகலிங்கத் தம்பிரான்.

தருமபுர ஆதீ

843

குருபாதம்

குருஞானசம்பந்தர் திருவடி வாழ்க!

தருமபுர ஆதீனம் இருபத்தைந்தாவது மகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

திருமுன்னர்

**குருஞானசம்பந்தர் குருபூசைத் திருநாளை முன்னிட்டு,**

**கொலுமவர் காட்சியில்**

# வாசித்த வாழ்த்தியல்

---

உலகநல் லுயிர்கள் உயர்ந்திட இன்பம்
அலகில் காலம் ஆர்ந்திட அன்று
அருள்செய் ஞானசம் பந்தநற் குரவன்!
இருள்மல மகற்றும் எரிசுடர்ப் பரிதி!
வழிவரு இருபான் ஐந்தாம் வள்ளல்!
சுப்பிர மணியத் திப்பியத் தோன்றல்!
பாமரர்க் குண்மை யுணர்த்திட நாளுந்
தேமரு செஞ்சொற் பொழிவினை யளித்தும்
எம்மனோர்க் கெல்லாம் இனிதுறுங் கல்வி
செம்மலர் நோன்றாட் சிறப்பினாற் றெரித்தும்
எல்லா உயிர்கட் கும்மிறை கோயில்
நல்லா றுணர்த்தும் நன்னிலைக் குறியெனப்
பல்லார் உணரப் பணியுடன் குடமுழுக்
கெல்லையில் லாதன இனிது நடாத்தியும்
இலங்கிடச் செய்யும் எங்குரு நாதன்!
மிடியவர் நீங்க மேன்மைமிக் கோங்கப்
படியவர் புகழப் பாவலர் மகிழ
அடியவர் பலரை ஆக்குவித் தருளிக்
கடிகமழ்த் தாமரை அடியிணை யுதவி
வாழ்க அவனருள் வாழ்கபல் லாண்டே.

தருமபுர ஆதீனம்,
14—6—52.

இங்ஙனம்,

**ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள்.**

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 11] நந்தன ௵ ஆனி ௴ 10—7—52. [இதழ் 8

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினுய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்.

## ஆணிவேர்

மரத்தின் ஆணிவேர் மரத்தை வளர்க்கிறது; காப்பாற்றுகிறது. சல்லிவேர் எங்கும் பரந்து தேடித் தொகுக்கும் உணவுச் சத்தெல்லாம், மரத்தையும் ஆணிவேரையுமே வளர்க்கின்றன. ஆணிவேரற்றால் மரம் நிமிர்ந்திருக்காது. மரத்தினிடமிருந்து மக்கள் எதிர்பார்க்கும் பலன் பழமும், பூவும், காயும். அதுபோல உலக மரம் ஆஸ்திகமாகிய ஆணிவேரால் நிலைத்திருக்கிறது. அது அற்றுப்போனால் பயனாகிய ஒற்றுமையை — உறுதியை — இன்பத்தை மக்களடைவது எங்ஙனம்?

ஆஸ்திகம் என்பது என்ன? உண்டு என்பதுதானே! எதனையும் இல்லை இல்லை என்பவனுக்கு இருக்கும் பொருள் எது? உண்டு உண்டு என்பவனுக்கு இல்லாதபொருள் எது? உண்டென்பவன் காண்பதெல்லாம்நிறைவு. இல்லையென்பவன் காண்பதெல்லாம் குறைவு. நிறைவுதான் மக்களை இன்பத்தில்

நிலைக்கச்செய்யும். குறைவுதான் துன்பத்தில் திளைக்கச் செய்யும். நிறைவு நேர்மையைத்தரும். குறைவு கொடுமை வளர்க்கும். ஆதலால் நிறைவாகிய ஆஸ்திகம் ஒன்றாலேயே உலகம் வளர்ச்சியடைகிறது.

உலகம் உண்டு நாம் உண்டு என்று எண்ணுகிற எவனும் நிலைத்த ஒரு பொருள் உண்டு என்பதை நேசிக்கத்தான் செய்வான். இந்த நேசிப்பே ஆஸ்திகம். இதுதான் உலகத்தின் ஆணிவேர். இதை அசைக்க, அல்லது அரிக்க எந்த வேர்ப் புழுவாலும் முடியாது. வேர்ப்புழு வாழுமிடமும் உலகம்தான் என்பது நினைவிருக்கட்டும். ஆதாரமற்ற ஆதேயம் இருக்க முடியாது என்பது அறிவாளிகண்ட முடிவு. ஆதலால் ஆஸ்திக ஆணிவேரிலே வினைப்பயனது நுகர்ச்சிக்குப் பயன் படுகின்ற உலகமரம் நிலைபெற்றிருக்கின்றது என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும். அதனை அசைப்பவர்கள், அரிப்பவர்கள், மரத்தின்மேலேறிக்கொண்டு அடிமரத்தை வெட்டிய அறிவாளிகளே ஆவர் என்பது திண்ணம்.

உண்மை ஓங்குக! உண்மைதான் ஆஸ்திகம்.

---

## கடவுள் கருணைகாட்டும் முறை.

உயிருக்குயிராக உண்ணின்றுணர்த்தினும் மக்கள் அறியமாட்டார்கள் என்று எண்ணி, அகத்தும் புறத்துமாக இருந்து உணர்த்துவோம் என்று, கடவுள் குருவடிவம் தாங்கிவந்து உண்மையை உணர்த்துகின்றார். ஆதலால் கடவுளே குரு; குருவே கடவுள்.

—குருஞானசம்பந்தர்.

# திரு. C. இராமநாத முதலியார் அவர்கள்

## திறப்புரை.

13–3–52 ல் சீகாழி தேவஸ்தானத்தில் நடைபெற்ற சைவசித்தாந்த மாநாடு, தேவாரவகுப்பு ஆண்டு விழாவை ஆரம்பித்து வைத்தபோது நிகழ்த்தியது.

உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

தலைவர் அவர்களே ! கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்த கனவான்களே ! சீமாட்டிகளே !

இப்படியன்; இந்நிறத்தன்; இவ்வண்ணத்தன்; இவன் இறைவன் என்று எழுதிக்காட்டொணாதவரும், ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் ஜோதியாய் உள்ளவரும், வரம்பிலா மறைநூல்களால் அளந்து அறியப்படாதவரும் ஆகிய சிவபெருமானை, 'தோடுடைய செவியன்' 'விடை ஏறி' 'ஓர் தூவெண்மதி சூடி' என அடையாளம் பல சொல்லி, தன் மணிவிரலால் சுட்டிக் காட்டிய திருஞானசம்பந்தர், ஆழி மிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் ஆகிய திருநாவுக்கரசர், எம்பெருமானால் தடுத்தாட்கொள்ளப்பெற்றுத் தில்லைவாழ் அந்தணர் முதலாக இசைஞானியார் இறுதியாகவுள்ள திருத் தொண்டர்களின் பெயரைத் தொகுத்துக்கூறிய சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய மூவரும் திருவாய்மலர்ந்தருளிய தெய்வத் தன்மை பொருந்திய பாமாலைகள், தேவாரம் எனப்பெறும்.

இத்தேவாரப்பதிகங்களின் எண்ணிக்கையும், அவற்றுள் இப்போது உள்ளவை எத்தனை என்பதும், அவற்றின் பெருமையும் பொல்லாப்பிள்ளையார் அருள்பெற்ற நம்பி யாண்டார் நம்பி போன்றவர்களால் எடுத்துக் கூறமுடியுமே தவிர என்போன்றாரால் கூறும் தகைமைத்தன்று. ஆயினும் ஆர்வமிகுதியால் சிலவற்றைக் கூறுகிறேன். அவையாவன:—

நெருப்பினுல் வேகாது, ஆற்றுவெள்ளத்தை எதிர்த்துச் செல்லும், ஆற்றின் குறுக்கே ஓடத்தைச் செலுத்தும், அரவு கடித்து இறந்தோரை உயிர்பெற்றெழச்செய்யும், ஆண்பனையைப் பெண்பனையாக்கும், தீராதநோய் தீர்க்கும், வெப்புநோய் வருவிக்கும், பின்பு அதைத் தீர்க்கும், குளிர்சுரம் வராமல் தடுக்கும், எலும்பைப் பெண்ணுருவாக்கும், கருங்கல்லைத் தோணியாக்கும், விஷத்தை அமுதமாக்கும், யானையைப் பணிவிக்கும், கதவைத் திறக்கும், மூடும், நீற்றறையைக் குளிர்விக்கும், முதலையுண்ட பிள்ளையை வருவிக்கும், செங்கல்லைச் செம்பொன்னுக்கும், ஆற்றில் இட்ட பொன்னைக் குளத்தில் வருவிக்கும், பாடுவார் பசி தீர்க்கும், முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானைத் தேவியாருடன் ரிஷபவாகனத்தில் கொண்டுவந்து காட்டும், அடியார் பிறவிப்பிணிக்கு மருந்தாகும். இத்தகைய தேவாரப்பதிகங்களை ஓதுகிறவர்கள் இறைவன் அருளால் இஷ்டசித்தி அடைவார்கள். மேலும் இதன் பெருமைகளைக் கூறின் காலதாமதமாகும். ஆகையால் அதனைவிடுத்துத் தேவாரப்பதிகங்களில் முதல் பதிகத்தில் கூறப்பட்டிருக்கும் சிவபெருமான், குரு லிங்க சங்கம வடிவினராய் எழுந்தருளியிருக்கும் இக் காழித் தலத்தின் இயல்பையும் சிறிது கூறுகிறேன்.

இத்தலம் சிவபெருமான் தோணியில் அமர்ந்தருளுவதால் தோணிபுரம் எனவும், பிரமதேவரால் பூசிக்கப்பெற்றதால் பிரமபுரம் எனவும், காளி காளிதன் இவர்களால் பூசிக்கப் பெற்றதால் காளிபுரம் எனவும், ராகு பூசித்ததால் சிரபுரம் எனவும், சண்பைப்புல்லால் வந்தபழி தன்னைச் சாராதிருக்கும் பொருட்டுக் கண்ணன் பூசித்ததால் சண்பை எனவும், பராசரர் தமக்குண்டான கொச்சை நீங்கவேண்டிப் பூசித்ததால் கொச்சைவயம் எனவும், சூரனும் பதுமனும் ஒருருவாகித் தவஞ்செய்காலையில் மூங்கிலின் அடியில் சிவலிங்கமாய்த் தோன்றி அருள்செய்ததால் வேணுபுரம் எனவும், உரோமசர் பூசித்துத் தமது மலத்தொகுதி நீங்கப்பெற்றமையால் கழுமலம் எனவும், சிபிச்சக்கரவர்த்திக்காக அக்கினிபகவான் புரு உருவமெடுத்துக் காவிரிநீர் கொண்டுவந்தமையால் புறவம்

எனவும், மகாவிஷ்ணு வராகஉருவம் எடுத்துப் பூமியைப் பிளந்து உள்சென்றதால் பூந்தராய் எனவும், தேவர்கள் புகலிடமாகக்கொண்டதால் புகலி எனவும், சுக்கிரன் பூசித்ததால் வெங்குரு எனவும் பன்னிரண்டு திருநாமங்களுடனும் இன்னும் ஒவ்வொரு காரணத்தினுல் சங்கநிதிபுரம், பதுமநிதிபுரம், சிவாசாரியபுரம், பராசரக்ஷேத்திரம், புனர்ஜன்மபுரம், கிரிபுரம், உமாபதிபுரம், சீவன்முத்திபுரம், நீலகண்டவெற்பு, மாலைமாற்றுப்பதி, எழுகூற்றிருக்கைப்பதி எனப் பதினெரு திருநாமங்களுடனும் விளங்கும் இத்தலத்தில் தேவாரவகுப்பு ஒன்று நடத்தி, சிறுவர் சிறுமியருக்குத் தேவாரப்பதிகங்களை இசையுடன் பயிற்றுவிக்கும்படி ஆக்ஞாபித்திருக்கும் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் பெருமை யாவருடைய மகிழ்ச்சிக்கும் போற்றுதலுக்கும் உரியதாகும். ஏனெனில் இத்தலமே மூலாதார க்ஷேத்திரமெனச் சிவபெருமானுலேயே அருளிச் செய்யப்பெற்றது. ஆளுடையபிள்ளையார் இத்தலத்தில் திருவவதாரஞ் செய்து மூன்றுவயதிலேயே திருத்தோணிச் சிகரம் பார்த்து, அம்மே! அப்பா! என்று அழுதருளி, சிவ பெருமான் அருள்பெற்று உமையம்மை சிவஞானங்குழைத் தருளிய திருமுலைப்பாலுண்டு சிவஞானசம்பந்தராயினர்.

மூவர் முதலியவர்களாலும் பாடப்பெற்றது. எட்டாந் திருமுறையாகிய மாணிக்கவாசகர் 'பிடித்தபத்து' பாடியதலம் இதுவே. பதினெராந்திருமுறையில் பட்டணத்துப்பிள்ளையார் பாடிய கழுமல மும்மணிக்கோவை. நம்பியாண்டார் நம்பிகள் பாடியருளிய ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி, மும்மணிக் கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை முதலியவற்ருலும் இத்தலம் பாராட்டப்பெற்றுச் சிறப்புடன் விளங்குகின்றது.

இத்தலத்தில் காழிச் சிற்றம்பலநாடிகள், மச்சுச்செட்டி, அருள்நமச்சிவாயர் முதலிய பெரியார்கள் வாழ்ந்துவந்தார்கள். மேலும் பிற்காலத்தில் காழியில் வசித்துவந்த அருணசலக் கவிராயர், சீகாழி தேவஸ்தானக் கட்டளை விசாரணை சிதம்பரநாதமுனிவர், திருவாவடுதுறைஆதீனத்து எட்டாவது

பட்டத்து மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணிதேசிக சுவாமிகள், தருமபுர ஆதீனத்துப் பத்தாவது பட்டத்து மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞானதேசிக சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை, நமசிவாயக் கவிராயர், முன்ஸீப் வேதநாயகம் பிள்ளை, சீகாழி முத்தையா உபாத்தியாயர், சிதம்பரம் பிள்ளை, தருமபுர ஆதீனத்து இருபத்துமூன்றுவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களின் ஆக்ஞைப்படி அம்மடாலயத்திலிருந்து ஏட்டுச் சுவடிகள் சிலவற்றை அச்சுவாகனம் ஏற்றியருளிய எனது ஆசிரியர் தருமையாதீன வித்துவசிகாமணி ப. அ. முத்துத் தாண்டவராயபிள்ளை முதலிய அறிஞர்களால் தலபுராணம், கோவை, மும்மணிக்கோவை, பள்ளு, அந்தாதி, பிள்ளைத் தமிழ், மாலை, வண்ணம், சிந்து, பதிகம், தனிப்பாடல்கள் முதலியவைகளால் போற்றப்பட்டிருக்கிறது இத்தலம்.

இத்தலத்தில் தோணியப்பரும், சட்டைநாதரும் வீற்றிருந்தருளும் திருமலையை எங்கள் குடும்பத்தினர் திருப்பணிசெய்து 1891-ம் வருஷம் கரஹு ஆவணிமீ 26வ கும்பாபிஷேகம் செய்வித்தார்கள். பிறகு பிரமேசர், திருநிலைநாயகி, சம்பந்தர் இவர்களின் ஆலயத் திருப்பணி நடந்து கும்பாபிஷேகம் நடைபெற்றது. கடைசியாகப் பிரமேசருக்கும் திருநிலை நாயகிக்கும் 25—1—1926 ல் இருபத்துமூன்றுவது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தின் ஆக்ஞைப்படி கும்பாபிஷேகம் நடைபெற்றது. பிறகு திருமலையில் நடைபெறவேண்டிய சில திருப்பணிகள் எங்கள் குடும்பத்திலேயே திருப்பணிசெய்து 23—3—51 ல் கும்பாபிஷேகம் நடந்தது.

இப்போது திருவருள்கூடுவதால் இம்மகாசந்நிதானத்தின் ஆக்ஞையால் மிகுந்த பொருட்செலவில் மகா கும்பாபிஷேகம் பெருமானுக்கும் மற்றும் எல்லாப் பரிவாரங்கட்கும் நடைபெறுவதாயிருக்கின்றது 17—3—52 ல்.

அரசாங்கத்தார் இக்கோயிலில்இருந்து எடுத்துக்கொண்டு போயிருக்கும் கல்வெட்டுக்களில் 381-வது இலக்கமுள்ள

இரண்டாம் குலோத்துங்கனது நான்காம் ஆண்டு சாசனத்திலிருந்து, இத்தலத்தில் இந்தத் திருஞானசம்பந்தர் ஆலயத்திலேயே நீண்டகாலமாகத் திருமுறைகளை எழுந்தருளுவித்தும் நித்தியபூசை நடத்தியும் பாதுகாத்தும் பழைய ஏடுகளைப் புதுப்பித்தும் வரப்பெற்றன என்பது தெரியவருகிறது.

எனவே இவ்வளவு பெருமைவாய்ந்த இவ்விடத்திலே வாசகசாலை அமைந்திருப்பதும், தேவாரவகுப்பு நடந்துவருவதும் அதன் ஆண்டுவிழாவைத் திருஞானசம்பந்தர் சன்னிதியில் ஒரு சிவாசாரியார் தலைமையில் ஆரம்பித்துவைக்கும்படி எனக்கு மகாசந்நிதானம் ஆக்ஞையிட்டதும் திருவருளின் செயலென்றே கருதுகிறேன். இப்பெருமையை எனக்களித்த ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்கு என் நன்றியைச் செலுத்திக்கொண்டு மேல்நடைபெறவேண்டிய விஷயங்கள் நடைபெற, தலைவரவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நாமார்க்குங் குடியல்லோம் நமனை அஞ்சோம்
    நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம்அல்லோம்
    இன்பமே எந்நாளும் துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
    சங்கரன்நற் சங்கவெண் குழையோர்காதில்
கோமாற்கே நாம்என்றும் மீளாஆளாய்
    கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே.

---

391



# * சிவஞானபோதார்த்த தோத்திரப்பாமாலை

(வித்துவான் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், ஆரணி)

உலகமெலாம் அவன் அவள் அஃ தெனும்பகுப்பாய்ச் சுட்டி
உணர்வழியில் வருமுறைறவந் துலவிமறைந் திடும்அவ்
விலகலைச்செய் முதல்வனினை அன்றிஅவை தோன்று
மெய்யறிவின் உருவுடைய நித்தாமுத்தன் நீயே
அலகறுசத் திகளையுறு மலபரிபக் குவத்தை
அடைவதற்கு மறுபடைப்பும் ஆற்றுங்கா ரணனே
பலகவித்தார் அணிபதத்தாய் தருமபுரத் தொளிரும்
பரமாசா ரியசுப்ர மண்யசிவம் போற்றி. (க)

அவையேயாய் நீயேயாய் அவையேநீ யேயாய்
அருங்கலப்பால் உடல்உயிரும் பொருளியல்பால் வேறும்
நவைதீர்கண் இரவியும்உள் ளுயிர்க்குயிராம் இயைபால்
நாட்டத்தின் ஒளிஉயிரின் அறிவும்போல் ஒன்றாய்க்
கவைசேர்வே றாய்உடனாய்க் கலந்தபர சிவனே
கனகமணி மாடஞ்சேர் தருமையொளிர் சடைமேற்
சுவைசால்வான் நீர்திங்கள் தொழுவார்உள் ஒளிரத்
தோற்றியருள் சுப்பிரமண் ணியகுருவே போற்றி. (உ)

திருவருட்சத் தியின்எய்தும் இருவினையால் உயிர்கள்
சென்றுவர அவ்வருளின் நீக்கமின்றி நிற்கும்
உருவருமூன் றையுங்கடந்த ஒருவா எங்களையாண்
டோம்புதற்குத் தருமையில் உயரியநற் கோயில்
வருவண்கைப் பரமாசா ரியனேஐ யைந்தா
வதுகுருதே சிகசுப்ர மண்யமுதல் வாநின்
திருவடியே துணைஎன்று தொழுவார்க்கெல் லாம்நற்
செல்வமும்கல் வியும்அருளும் நல்கிறைவா போற்றி. (ங)

---

*13—6—1952 அன்று தருமபுர ஆதீன ஸ்தாபகர் குருபூஜைவிழாவில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவடிகளில் சூட்டியது.

இலதென் றதெதுஅதுஉண் டெனதுடல் என்றதனுல்
இந்திரியங் கொண்டறிவ தொன்றுளதால் கனவில்
வலதெண்ணி யறிவதனுல் உறங்கமறை விதியின்
மாந்தின்பத் துன்பத்தால் உணர்த்தஉணர் தலினுல்
நலதென்று கொளும்மாயா தனுவின்இருள் மலத்தால்
நற்கரண வமைச்சரொடும் ஐந்தவத்தை நண்ணும்
பலதெங்கு பலாமாச்சூழ் தருமைமடத் தொளிரும்
பரமாசா ரியனேநின் பாதமலர் போற்றி. (ச)

பொறிபுலனை அறியினும்தம் மொடுதம்மை இயக்கும்
புருடனெனை அறியாவா றியானும்இரு வினையிற்
செறியருளின் வருபயனை உணரினும்என் னையும்எற்
செலுத்துநின தருளினையும் உணரேன் அவ்வறிவும்
குறியிரும்பைச் சந்நிதியிற் கொளுங்காந்தம் போன்று
குறிப்பால்நின் றதிட்டிக்கும் நின்னருட்சந் நிதியாம்
வெறிகமல மகளிர் ஞானம்பி கையோடினிது
மேவவிளங் கெழிற்சுப்ர மண்யகுரு போற்றி. (ரு)

என்னறிவால் அறியப்பெற் றிடுவாயோ சுட்டிற்
கெட்டுவன கெட்டொழியும் எனும்இயல்பால் ஆவி
தன்னறிவிற் கெட்டாய்நீ முயற்கோடு போலத்
தட்டுப்ப டாதவனும் அல்லைநினை உணர
நின்னறிவே வுறுதுணையாம் ஓராற்றுல் உணர்வும்
நிகழ்ஒருவாற் ருல்உணரா மையும்உடைய பரனே
முன்னறிவின் முன்னறிவே பின்னவற்றின் பின்னும்
முழுமுதலே சுப்பிரமண் ணியகுருவே போற்றி. (சு)

நின்னெதிரே முனைத்துநில்லாப் பாசத்தை நீயும்
நின்றுசுட்டி அறியாய்அப் பாசமும்நிற் சாரா
தென்னெதிரே பதிநீயும் பாசமும்வெவ் வேருய்
எதிர்ப்படலால் யானேநின் னையும்பாசத் தினையும்
பொன்னெனவும் இருளெனவும் பொருந்துரிமை யுடையேன்
புவனமொடு நூற்கடலும் போதாவென் ருேங்கும்
மன்னெடுஞ்சீர்ச் சுப்பிரமண் ணியகுருதே சிகனே
வளர்ஞான சம்பந்தப் பெருமானே போற்றி. (எ)

ஐம்புலவே டருள் வளர்ந்து நினைமறந்த மகனேற்
கருட்குருவாய் வந்தடியேன் பலபிறவித் தவத்தின்
நம்புமுளத் துண்ணர்த்தினையென் னியல்பினை அங் கொடியே
நான்வேடு வரின்நீங்கி நின்னிருபொன் னடிசேர்
செம்புலத்தேன் ஆனேன்பொய் யாதகுலக் கொடியாஞ்
சீர்வளர்கா விரிக்கரையிற் செறிபொழில்சூழ் தருமைப்
பம்புமுர சொலித்தன்ன தானஞ்செய் துவக்கும்
பரமாசா ரியசுப்ர மண்யகுரு போற்றி. (அ)

குறையுணர்வாம் என தறிவும் அறிவேயில் லாத
குலவுபா சத்தாலும் குறித்தலரும் பதியே
குறைவறநின் ருளிர்நிறைவே கோதில்லா அமுதே
கொழுஞ்சுடர்க்குன் றேநின்றன் திருவடிஞா னக்கண்
நிறைவுறலாற் பேய்த்தேராம் பாசமென நீங்கின்
நின்னடித்தண் ணிழலைஎழுத் தைந்துமெனக் கருளும்
பொறைமுதலாங் குறைவடிவே தருமையெழிற் கோயிற்
பொருந்தியருள்சுப் பிரமண்ய சொக்கலிங்கம் போற்றி. (கூ)

பெருமானே என்னுடன்வே றின்றி யறிந்தும்
பேதையே னேஅறிந்தேன் எனப்பிரிவின் றுறையும்
குருமாசி லாமணியே நின்னெடுட னுகிக்
குறித்தும்நீ வேருகக் குலவிடும்ஒற் றுமையுற்
றெருமாறு பாடுமிலா துன்பணியின் வழுவா
துலவின்மும் மலமுந்தீர்ந் தொழியுமுண்மை யீதே
மருமாருப் பொழிற்றருமை மதுரைதிரு வாரூர்
வாழ்சுப்ர மண்யகுரு பரனே போற்றி. (க0)

என்கண் ணுக் கியான்காட்டிக் காண்கின்ற தேபோல்
எனக்கிறைநீ காட்டிக்காண் கின்றமெய்மை யொன்றே
நன்கறிந்து பிறிதொன்றும் நாடாதே அந்த
நலமேஆ யும்உணர்வோ டன்புசெய நண்ணி
நின்கமலத் தாளிணையாம் பேரின்ப நுகர்வே
நெகிழாது நிலவுதற்குத் தலைப்பட்டேன் ஆசைப்
பொன்கன்னி மண்மூன்றும் பொருந்தாவா றெனையாள்
பொழிற்றருமைச் சுப்பிரமண் ணியகுருவே போற்றி. (கக)

செம்மலர்நோன் றுள்சேர லொட்டாது தகையுந்
தீயமலந் தீர்த்துண்மை ஞானியரை மருவி
அம்மலம்அங் கனம்கழுவப் பெற்றுமல மயக்கம்
அகலரின தடிநேயம் மிகுந்தவரோ டிணங்கி
மும்மையெழிற் கரணசுத்தி யொடும்அவர்மெய் வேடம்
மூர்த்திதலந் தீர்த்தமெலாம் நீஎனவே தொழுது
செம்மைநெறி கடைப்பிடித்துய்ந் தேன்பிறவிக் கடலைத்
திரக்காரம் புரிசுப்ர மண்யகுரு போற்றி (கஉ)

மறப்பித்து ஞானவிழி மலக்குழியில் வீழ்க்கும்
வன்கணராம் இழிவுடையோர் திறத்திலுறு சேர்ச்சி
அறப்பித்து நின்னடியார்க் கடியரினத் தாகி
அகன்றேன்தொல் வினையைமெய் யருளின் நினைஉணர்ந்தே
துறப்பித்துச் சைவர்களைத் தொண்டுகொண்டாண் டருளும்
சுப்பிரமண் ணியபரமா சாரியனே வாழ்க
பெறப்பித்துச் சிவநெறியில் உலகவரைச் செய்தே
பேரியமம் போல்விளங்கிப் பெரிதினிது வாழ்க.

வாழ்க தருமபுரம் வாழ்க திருவோங்குமடம்
வாழ்க குருசுப்ர மண்யசிவம் — வாழ்க
திருமுறைமெய் கண்டநூல் சீர்ச்சிவப்பூண் வாழ்க
ஒருமுறையும் போற்றமறு தோர்.

---

395

# * திருஞானசம்பந்தர் திருமுறை

வித்துவான், திரு. சி. துரைசாமி ஐயர் அவர்கள்

தலைவர், ஸ்ரீமத் சிவஞானபாலைய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி,
மயிலம்.

**தோற்றுவாய்:** திருவளர் காழியில் "கற்புமேம்படு சிறப்பின் கணவனுர் கருத்தமைந்த" பகவதியாரை வாழ்க்கைத் துணைவியாகக்கொண்ட சிவபாதவிருதயர் "அரவணிந்த செஞ்சடையார் அடியலால் அறியாது" மனை வாழ்க்கை வாழ்ந்தனர்.

அதுகாலை சமணர்முதலானேர் பொய்மிகுத்து அரன்பூதி சாதன விளக்கம் போற்றப்படாதருகுதல்கண்டு இடருழந்தார். அதனுல் பரசமயம் நீருக்கும் தவப்புதல்வன் வேண்டுமெனத் தவம்புரிந்தார். அதன்பயனுகச் சைவமும் தமிழும் தழைத்தோங்க, திருநீற்றின் செந்நெறி செழித்தோங்க "திசையனைத்தின் பெருமை எலாம் தென்திசையே வென்றேற" செழுந்தமிழ் வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல உலகெலாம் சிவம்பெருக்கத் திருஞானசம்பந்தர் தோன்றினர்.

தோன்றிய மூன்ருண்டில் நீராடச்சென்ற தந்தையோடு சென்ற பிள்ளையார், தந்தை நீரில் மூழ்குதல் கண்டு அம்மே அப்பா என்றழுதார். கண்ட கண்ணுதலோன், அருள் புரிவான்விரும்பி மலைக்கொடியை பால்அடிசில் ஊட்டென்ன, அம்மையார் திருமுலைப்பால் வள்ளத்திற் கலந்து சிவஞானத் தின்னமுதம் குழைத்து ஊட்டினர். அதனுல் "சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்" முதலான மெய்ஞ் ஞானங்களை உணர்ந்தார் சம்பந்தர்.

---

* தருமபுர ஆதீன ஸ்தாபகர் குருபூஜை விழாவைச்சார நடைபெற்ற திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டில் குன்றக்குடி திருவண்ணமலை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணசல தேசிக சுவாமிகள் அவர்களின் சீரிய தலைமையில் 18—5—51அன்று நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்

**திருமுறை:** மெய்ஞ்ஞானங்களை உணர்ந்த சம்பந்தர் தந்தைவினாவிற்கு விடையாக "தோடுடைய செவியன்" என்று ஆரம்பித்துப் பதிகம் பாடினார். அதுமுதல் இறைவன் எழுந்தருளியுள்ள தலங்கள்தோறும் சென்று பல தேவாரப் பதிகங்களை அருளிச்செய்து அடியார்களை இறைவன் கழலேத்தும் இன்பத்துள் ஆழ்த்தி, நல்லவர் தீயவரெனாது நச்சினர் செல்லல் கெடச் சிவமுத்தியை அடையச்செய்தனர். தலங்கள்தோறும் பாடிய திருப்பதிகங்களின் சிறப்பினைக் கருதி அவைகளை முதல் மூன்று திருமுறைகளாக வகுத்தனர் பின்வந்தவர்.

எல்லா உயிரும் விரும்பும் அழியாப் பேரின்பமாகிய வீட்டுநெறி செல்வதற்குரிய ஒழுங்கான நெறியை உணர்த்தும் நூல் என்பதுதான் திருமுறை என்பதின் திரண்டபொருள்,

"புனலில் ஏடெதிர் செல்லெனச் செல்லுமே
புத்தனார் தலைதத் தெனத் தத்துமே
கனலில் ஏடிடப் பச்சென் றிருக்குமே
கதவு மாமறைக் காட்டில் அடைக்குமே
பனையில் ஆண்பனை பெண்பனை ஆகுமே
பழைய என்புபொற் பாவைய தாகுமே
சின அராவிடம் தீரெனத் தீருமே
சிறந்த சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே."

"பயனாகு நல்லாண் பனைக்கு விடத்திற்கு
மயிலாகு நோய்க்கு மருந்தா—முயிராகுஞ்
சிந்துமெலும் பிற்குச் சிரபுரத்து நாவலன்சம்
பந்த னியம்பு திருப் பாட்டு."

என்று பிற்காலத்தாரால் சிறப்பிக்கப்பெற்ற இதனுள் சைவ சித்தாந்தத்தின் முடிந்தபொருளாகிய முப்பொருள் உண்மையைப், பாலில் படு நெய்போல் பரக்கக்காணலாம். அன்றியும் வடமொழி தென்மொழி வல்லுநரான அருண்மிகு சிவஞான

முனிவர் ஆறும் வேற்றுமை உரிமைப் பொருளைப் பலவித மாகப் பிரித்து அவைகளுக்கு எடுத்துக்காட்டுக் கூறுபவர் "சம்பந்தனது தமிழ்" என்று காட்டுவார் என்றால் இந்தத் திருமுறைகளின் சிறப்பை என்னென்பது.

**தமிழ்ப்பற்று:** சம்பந்தர் தன்னைக் குறிக்கும் இடந் தோறும் "தமிழ் விரகன்", "தமிழ் ஞானசம்பந்தன்", "தமிழ் நாடும் ஞானசம்பந்தன்" என்பனபோன்ற அடைமொழிகளைக் கூறுவதினாலும் "மந்திபோல் திரிந்தாரியத்தோடு செந்தமிழ்ப் பயன் அறிகிலா அந்தகர்" என்பனபோன்ற சொற்றொடர் களால் தமிழ் அறியாதவர்களை இழித்துக் கூறுவதாலும் தமிழ்ப்பற்று மிக்குடையவர் என்பது போதரும்.

**வாழ்க்கை இன்பம்:** "கனைகொள் இருமல் சூலைநோய் கம்பதாளி குன்மம்" முதலிய செடிகொள் நோய் கொண்ட யாக்கை உயிரொடு வாழுங்காலத்து ஓரோவமயம் அனுப விக்கும் இன்பத்தைப் பாம்பின் வாயில் அகப்பட்ட சிறுவண்டு தேனைச்சுவைத்து இன்புறலை ஒக்கும் என்னும் கருத்துப்பட "செடிகொள்நோய்யாக்கையைம் பாம்பின்வாய்ச் சிறுபறவை கடிகொள்பூந் தேன்சுவைத் தின்புறலாமென்று கருதினாயே" என அருளுகின்றனர்.

**தற்குறிப்பேற்றம்:** சுவாமிகள் தேவாரங்களில் தற் குறிப்பேற்ற அணி அமைந்திருக்கும் மாட்சியும் பாராட்டற் குரியதாகும். "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு ஐம்மேலுந்தி அலமந்தபோதாக அஞ்சேல்" என்று அருள்புரிவான் அமர்ந்துள்ள ஐயாறு சொல்கின்றார் சம்பந்தர். ஆலயத்தின் உட்பிரகாரத்தில் அணிகள் ஒளிவிட்டு வீச வலமாக நடமாடுகின்றார்கள் மகளிர்கள். முரசினை முழக்குகின்றார்கள். முழவர்கள், மரமேறி மேல்நோக்கு கின்றன மந்திகள். மின்னொளிவீச இடியோசைமிகிர மழை

என்று அஞ்சி மரமேறி மந்திகள் வானத்தை நோக்குகின்றன என்னும் கருத்தமைய, "வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழையென்றஞ்சிச் சிலமந்தி அலமந்து மரமேறி முகில்பார்க்குந் திருவையாறே" எனப் பாடுகின்றார்.

சம்பந்தர் ஒருவமயம் செல்கின்றார் திருவீழிமிழலை. காண்கின்றார் உயர்ந்து தோன்றிய கோபுரத்தை. அதன்மேல் ஒரு மூங்கில் கம்பம். அதில் ஒரு துகிற்கொடி. அசைகின்றது விண்ணோக்கி. கண்டதும் இசையோடு பண் எழுகின்றது. "தாணுவாய் நின்றபர தத்துவனை உத்தமனை இறைஞ்சீர் என்று வேணுவார் கொடிவிண்ணோர் தமைவிளிப்பபோ லோங்கும் மிழலையாமே" இன்னும் இதுபோல் உள்ள தேவாரங்கள் படித்து இன்புறற்குரியன.

**இறைவன் தன்மை:** உயிர்கள் எண்பத்துநான்கு நூறாயிரம் பேதங்களையுடையன. அவைகள் அனைத்தையும் படைத்து எல்லாவற்றினும் உயிராக இரண்டறக் கலந்து நிற்பவன் இறைவன் என்னும் சாத்திரக் கருத்தை "உரை சேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம்யோனிபோதம் நிரை சேரப் படைத்து அவற்றின் உயிர்க்குயிராய் நின்றான் கோயில்" என்ற பகுதியால் அறிவுறுத்துகின்றார். இறைவன் அயனாகிப் படைத்தும், மாலாகிக் காத்தும், ருத்திரனாகி அழித்தும் ஆகிய மூன்று வடிவங்களைக்கொண்டு முத்தொழிலைச் செய்கின்றார் என்ற கருத்தை, "காணுமாறறிய பெருமானாகிக் காலமாய்க் குணங்கள் மூன்றாய்க் பேணுமூன்றுருவாகிப் பேருலகப் படைத்தளிக்கும் பெம்மான் கோயில்" என்ற பாடலால் விளக்குகின்றார்.

தான் ஒரு கருப்பையில் இல்லாதவனாக இருந்து எல்லா உயிர்களுக்கும் கருவாக இருப்பான்; உருவம் இன்றி எல்லா உயிர்கட்கும் உருவம் கொடுப்பான் என்பதும் சாத்திரக் கொள்கை. இதனைக் "கருவினாலன்றியே கருவெலாமாவன்ய உருவினாலன்றியே உருவுசெய்தானிடம்" என்னும் தேவாரத்தில் அறிவுறுத்துகிறார். எல்லா உயிரினும் இறைவன் கலந்து நிற்பினும் மெய்ஞ்ஞானமுடைய ஞானியர்க்கன்றி ஏனையோர்க்குச் சேயோன் என்பதை, "அகனமர்ந்த

அன்பினராய் அறுபகைசெற் றைம்புலனும் அடக்கி ஞானப் புகலுடையோர்தம் முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணன்" என்னும் தேவாரத்தில் அமைத்துள்ளார். இன்னும் இறைவன் தன்மையைக் கூறும் அழகினை விரிக்கிற் பெருகும்.

**அகப்பொருட்சுவை:** தலைவி தலைவனின் பெரும்புகழ் கேட்டலில் பெரிதும் விருப்புடையவள். அதனால் தலைவன் புகழைச்சொல்லும்படி, கிள்ளை முதலிய அஃறிணைப் பொருள் களை விரும்பி அழைத்து பெயர் சொல்லும்படி தலைவிகேட்டல் மரபு. இதனை உறுபெயர் கேட்டல் எனும் மெய்ப்பாடென்பர் ஆசிரியர் தொல்காப்பியர். இவ்விலக்கணத்திற்கு இலக்கிய மாக இருக்கிறது சம்பந்தர் தேவாரம் பல. அவற்றுள் ஒன்று,

"சிறையாரும் மடக்கிளியே! இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத்தொடு தரளம்
துறையாருங் கடல்தோணி புரத்தீசன் துளங்கும் இளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே"

**பயன்:**

"ஞானசம்பந்தன் பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லார்
புண்ணியர் சிவகதி அடைதல் திண்ணமே"

ஞானசம்பந்தன் சொல், "சிந்தைசெய்து பாடவல்லார் சிவகதி சேர்வாரே" எனவும், கவுணியன் சொல், "மடியாது சொல்லவல்லார்க்கு இல்லையாம் மறுபிறப்பே" எனவும், சம்பந்தன் தமிழ், " பண்கொளப் பாடவல்லார்க்கு இல்லை பாவமே" எனவும், "தமிழ் விரகனதுரை ஒருபதும் மன மகிழ்வொடு பயில்பவர் எழில் மலர்மகள் கலைமகள் சயமகள் இனமலி புகழ்மகள் இசைதர யிருநிலனிடை யினி தமர்வரே" எனவும் பாடிய திருக்கடைக்காப்புத் தேவாரங்களை நோக்குங் கால் இவர் தேவாரங்களை "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி" ஓதுவார்க்கு இம்மை இன்பத்தோடன்றி எந்நெறி யினும் மேல்நெறியாம் செந்நெறியினை அடைவித்து, பேரா வியற்கைப் பெரும்பொருளினை எய்துவிக்கும் என்பதும் ஒரு தலை.

400

## தருமபுர ஆதீனத்தில்

# திருநெறிய தெய்வத்தமிழ் மாநாடு.

(சென்ற மாதத் தொடர்ச்சி)

9—6—52 திங்கள் எட்டுத் தொகைநாள். சென்னை பன்மொழிப்புலவர் திரு. T. P. மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் M. A, B. L, M. O. L. தலைமையில் நிகழ்ந்தது. தஞ்சை ஹுஸூர் சிரஸ்தார் திரு. S, இராமச்சந்திர பத்தர் அவர்கள் குறுந்தொகை என்பதுபற்றிப் பேசினார்கள். அடுத்து, கலித்தொகையில் கண்ட கடவுட் கொள்கையினைத் திருப்பதி S. V. O. கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் வித்துவான் பிர்மஸ்ரீ K. S. விசுவநாத சாஸ்திரிகள் அவர்கள் தெளிவுற எடுத்து விளக்கினார்கள். பிறகு புறநானூறு என்ற தலைப்பில் தருமபுர ஆதீனக் கல்லூரிப் பேராசிரியர் வித்துவான் திரு. V. S. குருசாமி அவர்கள் பேச இறைவாழ்த்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

10—6—52 செவ்வாய் பத்துப்பாட்டு நாள். சென்னை ரிடையர்டு ஹைகோர்ட் ஜட்ஜ் பிர்மஸ்ரீ V. V. ஸ்ரீநிவாச ஐயங்கார் அவர்கள் B. A. B. L. தலைமை வகித்துச் சிறப்பித்தார்கள். சென்னை கலைமகள் ஆசிரியர் வாகீச கலாநிதி திரு. கி, வா. ஜகந்நாதன் அவர்கள் M. A. 'வழிகாட்டிகள்' என்பதுபற்றியும், பெங்களூர் சென்ட்ரல் காலேஜ் தமிழ்ப் பேராசிரியர், தருமபுர ஆதீனத் தமிழ்ப்புலவர், வாகீசமணி வித்துவான் திரு, S. ருத்திரபதி அவர்கள் M. A. 'பட்டினப் பாலை' என்பதுபற்றியும், சென்னை கார்ப்பரேஷன் ஹைஸ்கூல் தலைமைத் தமிழாசிரியர் தருமபுர ஆதீனத் தமிழ்ப்புலவர் வித்துவான் திரு. வை. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள் 'குறிஞ்சிப்பாட்டு' என்பதுபற்றியும், மாயூரம் குமரக்கட்டளை கட்டளை விசாரணை ஸ்ரீமத் சுவாமிநாதத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் 'நெடுநல்வாடை' என்பதுபற்றியும் சொற்பெருக்காற்றினார்கள்,

11—6—52 புதன் கேட்டைநாள், அன்று சென்னை திரு, அமிர்தகணேச முதலியார் அவர்கள் B. A. தலைமை தாங்கினார்கள். முதலில் சென்னை ஸ்ரீராமகிருஷ்ணமடம் ஸ்ரீ பரமாத்மாநந்தா அவர்கள் 'இராமகிருஷ்ணரின் தத்துவங்களை விளக்கிப் பேசினார்கள். பிறகு திருச்சி திரு. K. A. P. விசுவநாதம் அவர்கள் 'வள்ளுவரும் குறளும்' என்னும் தலைப்பில் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள், அடுத்து மயிலம் சிவஞான பாலைய சுவாமிகள் கல்லூரித் தலைவர் வித்துவான் திரு, சி. துரைசாமி ஐயர் அவர்கள் 'ஐந்திணை' நூல்களைப்பற்றிப்பேச இறைவணக்கத்துடன் கூட்டம் நிறைவேறியது.

12—6—52 வியாழன், காப்பியநாள். திருநாள் தலைவர் சென்னை திரு, T. M. நாராயணசாமிப்பிள்ளை அவர்கள் M. A, B. L, தலைமையுரை நிகழ்த்திய பிறகு மதுரை தியாகராஜாகல்லூரித் தலைமைத் தமிழ்ப்பேராசிரியர் தருமபுர ஆதீனத் தமிழ்ப்புலவர் சித்தாந்த கலாநிதி வித்துவான் திரு. ஔவை, துரைசாமிப்பிள்ளை அவர்கள் 'சிலம்பும் மணிமேகலையும்' என்பதுபற்றிப் பேசினார்கள். சிந்தாமணி இலக்கிய நலன் என்பதுபற்றிச் சென்னை விவேகாநந்தா கல்லூரிப் பேராசிரியர் பிர்மஸ்ரீ S. V. வரதராஜ அய்யங்கார் அவர்கள் M. A. M. O. L. விரிவுரை நிகழ்த்தினார்கள். பிறகு புரொபுஸர் D .V. திருவேதி அவர்கள் சுமார் ஒருமணி நேரம் உடற்பயிற்சி செய்துகாட்டி அதன்பயனையும் விளக்கிப்பேசினார்கள்.

13—6—52 வெள்ளி சாத்திரநாள். அன்று குருபூஜையாதலின் காலை 9 மணிமுதல் 12 வரை சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. தருமபுர ஆதீனப் பிரசாரகோஷ்டித் தலைவர் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமைவகித்தார்கள். காஞ்சீபுரம் பச்சையப்பன் ஹைஸ்கூல் கணித ஆசிரியர், தருமபுர ஆதீனத் தமிழ்ப்புலவர் திரு க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் B. A. L .T. 'சித்தியார்' என்ற அருள்நூலைப்பற்றியும், ஆரணி போர்டு ஹைஸ்கூல்

தமிழாசிரியர் தருமபுர ஆதீனத் தமிழ்ப்புலவர் சித்தாந்த ரத்னுகரம் மதுரகவி, வித்துவான் திரு முத்து சு. மாணிக்க வாசகமுதலியார் அவர்கள் 'சிவஞானபோதம்' என்னும் அருள் நூலைப்பற்றியும் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள்.

14—6—52 சனி காலை 9 மணிமுதல் 12 மணிவரையில் 'திருக்களிற்றுப்படியார்' என்பதுபற்றித் திருவையாறு அரசர் கல்லூரிப் பேராசிரியர் தருமபுர ஆதீனத் தமிழ்ப்புலவர், வித்துவான் திரு இராம. கோவிந்தசாமிப் பிள்ளை அவர்களும், திருவுந்தியார் என்பதுபற்றித் திருவாரூர் போர்டு ஹைஸ்கூல் தமிழாசிரியர் வித்துவான் திரு M, இரத்தினதேசிகர் அவர்களும், 'திருவருட்பயன்' என்பதுபற்றித் திருவண்ணமலை ஆதீன வித்துவான் திரு, தி. பட்டுசாமி ஓதுவார் அவர்களும் சொற்பொழிவாற்றினர்கள். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித் தமிழ்விரிவுரையாளர் வித்துவான் திரு. சுந்தரேசம் பிள்ளை அவர்கள், திருவாரூர் திரு, உருத்திரமூர்த்தி தேசிகர் முதலாகிய பல வித்துவான்களும் சமயப் பிரசங்கங்கள் நிகழ்த்தினர்கள்.

மாலை கவியரங்கம் 5 மணிமுதல் 6 மணிவரை, தஞ்சை பொதுநல அதிகாரி திரு தொ, மு. பாஸ்கரத்தொண்டைமான் M. A. அவர்கள் தலைமை வகித்தார்கள். அண்ணமலை உதவிப் பதிவாளர் திரு, T. D. மீனுட்சிசுந்தரம் பிள்ளை M. A. B. L. அவர்கள் 'காதலின் வெற்றி' என்னும் தலைப்பில் தாம் எழுதிக்கொண்டுவந்த கவிதைகளை வாசித்துக் காட்டினர்கள். அடுத்துக் கவியரங்கில் ஏறியவர் நாகை வித்துவான் திரு. வை. மு. சண்முகதேசிகர் அவர்கள். 'நாணல் பேசுகிறது' என்பது அவர் கவிதையின் தலைப்பு, அதற்குப் பிறகு அன்றைய தலைவராகிய திரு. தொண்டைமான் அவர்கள் தமது கவிகளை அரங்கேற்றினர்கள். அவர்கள் பாடிய கவி களின் தலைப்பு 'தமிழருக்கு:...என்பது.

இவைகள் முடிந்த பிறகு வழக்கம்போல் தருமபுர ஆதீன இசைப்புலவர் இசையரசு திரு, M. M. தண்டபாணிதேசிகர்

அவர்களின் இன்னிசை யரங்கும் நடைபெற்றது, இவைகளை யெல்லாம் கேட்டு அநுபவித்த மக்கள் அனைவரும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் சிவிகையில் ஆரோகணித்து உலாக் கொண்டருளிய பட்டினப் பிரவேசக் காட்சியையும் கண்டு களித்தார்கள். மகாசந்நிதானம் அவர்கள் திருக் கொலுக் காட்சி அருளும்போது புலவர் பெருமக்கள் பலர் துதிப்பா மாலைகள் பல அணிந்து அருட்பிரசாதம் பெற்றார்கள்.

*13—6—52* அன்று ஆதீன ஸ்தாபகர் ஸ்ரீமத் குருஞான சம்பந்த சுவாமிகள் குருபூஜை தினமாதலின் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து ஜூனியர் ஸ்ரீலஸ்ரீ வித்துவான் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் விஜயஞ்செய்திருந்தார்கள். காலை சொற்பொழிவுகளுக்குப் பிறகு நண்பகல் ஸ்ரீ சொக்க லிங்கப் பெருமானுக்கு விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனை கள் நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், குருபூஜையின் நினைவுமலராக அச்சிடப்பெற்ற 'இராமேசுவர யாத்திரை' என்ற ஆதீன வெளியீட்டினை அனைவர்க்கும் வழங்கினார்கள். பிறகு மாகேஸ்வரபூஜையும் இரவு வழிபாடும் சிறப்பாக நடைபெற்றன.

---

## தருமபுர ஆதீனம்

# ஸ்ரீகுருஞானசம்பந்தர் கழக வார வழிபாட்டு விழா

ஆதீனப் பல்கலைக் கல்லூரி ஸ்ரீ குருஞானசம்பந்தர் கழகத்தின் சார்பில் நடைபெற்ற இவ்வழிபாட்டில், கல்லூரி மாணவர்களோடு ஆதீனத் தேவார பாடசாலை, ஆதீன வேத சிவாகம பாடசாலை. ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்தரத் தொடக்கநிலைப்பள்ளி இவைகளில் பயிலும் மாணவர்களும் ஆசிரியர்களும் கலந்துகொண்டார்கள். 1—7—52 முதல் ஒரு வாரம் கீழ்க்குறிப்பிட்டவாறு ஒவ்வொரு ஆலயத்திற்கும் சென்று வழிபாடு நடத்தப்பெற்றது. ஆங்காங்கும் வழி பாட்டின்போது ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் எழுந்

தருளியாகி அனைவர்க்கும் அருட்காட்சி வழங்கியது மாண வர்களுக்கும் ஏனையோர்க்கும் ஒரு புத்துணர்ச்சியை ஏற் படுத்தி விட்டது. ஆங்காங்கும் விசேஷ அபிஷேக அலங் காரங்கள். மாணவர்கள் அனைவர்க்கும் பிரஸாதம். கோயில் களில் ஆசிரியர் மாணவர்களின் சொற்பொழிவு. வழிபாட் டிற்குச் செல்கின்றபோது ஒவ்வொரு நாளும் மாணவர்கள் அனைவரும் ஆசிரியர்களுடன் நித்தியானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு மடாலய முகப்பில் ஒருங்கே கூடியிருந்து மாலை 4½ மணிக்குச் சிவநாம முழக்கத்துடனும் சிவபுராண பாராயணத்துடனும் வரிசையாகக் குறிப்பிட்ட ஆலயத் திற்குச் செல்வார்கள். வழியிடையில் சிற்சில இடங்களில் இன்னிசைக்கருவிகளுடன் தேவார பாராயணம்செய்வார்கள், இந்நிகழ்ச்சிகள் வழியிடையில் ஆங்காங்குள்ள மக்கள் அனைவருக்கும் தெய்வ நம்பிக்கையை வளரச்செய்தன.

முதல்நாள் 1-7-52 செவ்வாய் மாலை கருங்குயில்நாதன் பேட்டை ஸ்ரீசக்திபுரீசுவரசுவாமி ஆலயத்தில் வழிபாடு நடந் தது. ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வழிபாட்டைத் தொடங்கிவைத்து ஆலயவழிபாடு மாணவர் களுக்கு மிகமிக முக்கியமானது என்பதைப் பலமேற்கோள் களுடன் விளக்கி மொழிந்தார்கள். தீபாராதனையின்போது, கனம் ராஜாஜி அவர்களின் ஆட்சி நீடுநிலவி மக்களுக்குப் பயன் அளிப்பதாக என எல்லோரும் ஏகமனதுடன் பிரார்த் தனை செய்துகொண்டார்கள். மழைபெய்தது.

2ம் நாள் 2-7-52 புதன்மாலை மணக்குடி ஸ்ரீசுந்தரேசுவர சுவாமி ஆலயத்தில் வழிபாடு நடந்தது. அது சிறு கிராம மாதலின் அங்குள்ள மக்கள் அனைவருமே ஆலயத்தில் கூடி யிருந்து வழிபட்டு உய்ந்தார்கள். ஆராதனை விநியோகங் களுக்குப்பின் ஆசிரியர்கள் மாணவர்களின் சொற்பொழிவுகள் நிகழ்ந்தன.

3ம் நாள் 3-7-52 வியாழன் மாலை மாயூரம் வள்ளலார் கோயில் ஸ்ரீவதான்யேசுவரசுவாமி ஆலயத்தில் வழிபாடு நடந் தது. குருவாரமாதலின் குருமூர்த்தி வழிபாடு அங்கு அன்று

விசேஷம். வழிபாடு முடிந்ததும் குருமூர்த்தி சந்நிதியில் ஆதீனப் பல்கலைக் கல்லூரி ஆசிரியர்களின் சொற்பொழிவு களும் நிகழ்ந்தன.

4ம் நாள் 4-7-52 வெள்ளிமாலை மாயூரம் ஸ்ரீ மாயூர நாதசுவாமி கோயிலில் வழிபாடு நடந்தது. நான்கு திருவீதி களிலும் மாணவர்கள் தேவார பாராயணத்துடன் வந்து ஆலயத்தை அடைந்தார்கள். தீர்த்தத்தில் நித்தியா நுட்டானங் களை முடித்து, வழிபாட்டையும் முடித்துக்கொண்டு பெரு மான் சந்நிதியில் அமர்ந்து தேவாரபாராயணம் நிகழ்த்தினார் கள். பாராயணத்தில் தேவஸ்தான தேவார வகுப்பில் திரு முறை பயிலும் மாணவர்களும் மாணவிகளும் கலந்து கொண்டு தேவாரங்களைப்பாடி மக்களைப் பரவசப்படுத்தினர். பிறகு ஆசிரியர்கள் மாணவர்கள் ஆகியோர்களின் சொற் பொழிவு. இவைகள் முடிய மணி 8 ஆயிற்று. அன்று வெள்ளிக்கிழமையாதலின் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர் களின் ஆணைப்படி அபயாம்பிகைக்குச் சந்தனகாப்பு அலங் காரஞ் செய்யப் பட்டிருந்தது. மேலும் நவசக்தி அர்ச்சனை, அர்ச்சனை ஆரம்பமுதல் ஆராதனைவரையில் ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் அம்மையின் திருமுன்பு அடியார் கூட்டங்களுடன் எழுந்தருளியிருந்து அருட்கோலக்காட்சி யில் திளைத்து நின்றார்கள். அபிராமியந்தாதி பாராயணமும் நடைபெற்றது. ஆராதனையின் முடிவில் தேவார வகுப்பு மாணவ மாணவிகள் அனைவர்க்கும் கண்ணாடி, தாம்பாளம், புதிய ஆடைகள் ஆதியன வழங்கப்பெற்றன. ஸ்ரீ சண்முகப் பெருமானுக்குச் சண்முகார்ச்சனை: அருமையான அலங்காரம், கண்ணைவிட்டகலாக்காட்சி. ஸ்ரீ மாயூரநாதப்பெருமானுக்கும் பஞ்சமுகார்ச்சனை நடைபெற்றது. இப்படியாக அன்றைய வாரவழிபாடு இனிது நிறைவுற்றது.

5ம் நாள் 5—7—52 சனிக்கிழமை விளநகர் ஸ்ரீ துறை காட்டும் வள்ளலார் ஆலயத்தில் வழிபாடு நடைபெற்றது. திருவாசக பாராயணத்துடன் மாணவர்கள் வீதிவலம் வந்தார்கள், நித்தியா நுட்டானங்களை முடித்துக்கொண்டு சாயரக்ஷை வழிபாட்டினை முறைப்படி செய்துகொண்டார்கள்.

பிறகு சுவாமி சந்நிதியில் தேவார பாராயணமும், சொற்பொழிவுகளும் நிகழ்ந்தன. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் வழக்கம்போல் அன்றும் இறைவழிபாடாற்றினார்கள்.

6ம் நாள் 6—7—52 ஞாயிற்றுக்கிழமை அட்டவீரட்டங்களுள் ஒன்றாகிய திருப்பறியலூரில் நடைபெற்றது. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும் எழுந்தருளியாகியிருந்தார்கள். ஆராதனைக்கு முன்னர் சுமார் ஒருமணிநேரம் தேவார பாராயணம் நிகழ்ந்தது. ஆசிரியர்களும் மாணவர்களும் பிரசங்கம் செய்தார்கள். ஆராதனையின்போது தலப்பதிகப் பாடல்கள் முழுவதும் பாராயணம் செய்யப்பெற்றது. பிறகு மாணவர்கள் அனைவரும் வழக்கம்போல் பிரஸாதம் அருந்திப் பெருமானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு ஆதீனத்திற்குத் திரும்பினார்கள். மணியும் 11 ஆயிற்று.

7-ம் நாள் 7—7—52 சோமவாரம் வழிபாட்டின் பூர்த்தி நாள். மாணவர்கள் திருவாசக பாராயணத்துடன் மாயூரம் காசி விசுவநாதசுவாமி கோயிலை அடைந்தார்கள். ஆலயத்தில் அநுட்டானங்களை முடித்துக்கொண்டு சந்நிதியில் அமர்ந்து பிடில் மிருதங்கத்துடன் தேவார பாராயணம் செய்தார்கள். மணியும் ஏழு ஆயிற்று. பிறகு 8½ மணி வரையில் தலப் பெருமையைப்பற்றியும், திருமுறைப் பெருமையைப்பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. பிறகு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் எழுந்தருளியானார்கள். தீபாராதனை நடந்தது. அனைவர்க்கும் திருநீறு வழங்கப்பெற்றது.

மறுநாள் 8—7—52 அன்றும் ஷை விசுவநாத சுவாமி கோயிலில் ஸ்ரீ தண்டாயுதபாணிக்குச் சந்தனக்காப்பு அலங்கார சண்முகார்ச்சனையும், சுவாமி அம்மனுக்கு விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகளும் நடைபெற்றன. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களும் வழக்கம்போல் வைத்தீஸ்வரன் கோயில் சென்று ஸ்ரீ முத்துக்குமாரப்பெருமானை வழிபட்டுக் கொண்டு சுமார் 8½ மணிக்கு எழுந்தருளியானார்கள். ஆராதனை வரையிலும் மாணவர்கள் தேவார திருவாசகங்கள், திருப்புகழ் கந்தரநுபூதி ஆகியவைகளைப் பாராயணஞ் செய்தார்கள்.

40?

Swami Sivananda - in

# THE DYNAMIC SPIRITUAL AWAKENING

Says:—

Nowhere during the entire Tour was Siva more at-home than at the Ashrams in Dharmapuram and Tirunelveli (both belonging to the Dharmapuram Adheenam). Words are too poor to describe the love that H. H. the Mahasannidhanam of the Mutt showered upon Siva. and the almost motherly attention he paid to Siva's physical well-being. Siva's stay at Dharmapuram in the loving care of the Mahasannidhanam infused fresh energy, vigour and spirit into his body and enabled it to rise equal to the zeal of his inner soul for selfless service.

His Holiness the Mahasannidhanam, head of the foremost Saivite-Mutt in South India, commands a very large following and respect for the profundity of his vast learning, the nobility of his bearing, magnanimity of his heart, and divinity of his inner personality. This magnetic Mahatma has been radiating ceaselessly the Message of divine living propounded by the founders of Saiva-Siddhanta. His contributions to the fund of spiritual literature are invaluable, his services towards the cultural uplift of the people inestimable and his love, charity and devotion indescribable. Dharmapuram Adheenam is aboon to South Indians; and the Mahasannidhanam their benefactor.

---

மாத மூன்று மழைபொழிந்தே மலிக வளங்க ளெவ்வுலகு
நீதி யரசர் பொலிந்திடுக நீறேடக்க மணிவிளங்கப்
போத மிகுத்தே யடியர்குழாம் பொங்கத் தேவி மான்
[மியத்தைக்
காதலுடனே யுரைப்பவர்கேட்பவர்கள்கருதும் பொருளடைக.

**கு - ரை:- மலிக - பெருகுக, நீறு - திருவெண்ணீறு, அக்கமணி - உருத்திராக்கமணி, போதம் - சிவஞானம், பொங்க- விளங்குக,** (16)

இனைய வளஞ்சேர் தேவிபுக ழிசைப்போர் கேட்போ ரெஞ்
[ஞான்றும்
மனையி லெழுதிப் புத்தகத்தை வைத்துப்பூசை புரிந்திடுவோர்
இனிய செல்வங் கல்விமிகப் பேறுதீர்க் காயு ளும்மெய்திப்
புனித ஞான மடைந்துமிகப் பொலிவ ரம்மை திருவருளால்.

**கு - ரை:- மகப்பேறு - நன்மக்களைப் பெறுதல், மிகப் பொலிவர் - மேன்மையாக விளங்குவர்.** (17)

இன்ன தேவி யெழில்பெறு மான்மியம்
மன்னு மார்க்கண் டேயவட நூறனிற்
பன்னு சாவர்ணி மன்வந் தரத்தின்பாற்
சொன்ன தென்று துணிவர் புலவரே.

**கு - ரை:- மார்க்கண்டேயவடநூல் - வடமொழியிலுள்ள மார்க்கண்டேய புராணம். சாவர்ணி மன்வந்தரத்தின்பால் சாவர்ணிக மனுவந்தரத்தைப் பற்றிக் கூறும் பகுதியில், புலவர் - பண்டிதர்.** (18)

**பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.**

தேவி திருவடிவாழ்க. தேவி மான்மியம் முற்றிற்று.

# தேவி மான்மியம் அத்தியாய அட்டவணை.

---

வெளியீடு எண் 270.

உ
குருபாதம்

# தேவி மான்மியம்



இது

தத்தைமங்கலம்

**பொ. நல்லதம்பிப்பிள்ளை அவர்கள்**
இயற்றிய மூலத்துடனும்,

ஈரோடு செங்குந்தர் உயர்நிலைப்பள்ளித்
தலைமைத் தமிழாசிரியர்

**வித்துவான், வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டரவர்கள்**

எழுதிய குறிப்புரை விசேடக் குறிப்புரை
முதலியவற்றுடனும் கூடியது.

ஞானசம்பந்தப் பிரசுரம் எண் 3.

**தருமபுர ஆதீனம்**

**1952.**

409

உ
சிவசக்தி துணை.

# தேவி மான்மியம்.

# முன்னுரை.

பரம்பொருளின் சக்தியாகிய தேவியின் மகிமை கூறும் நூலுக்குத் தேவி மான்மியம் என்று பெயர். இந்நூல் பதினெண் புராணங்களில் ஒன்றாகிய மார்க்கண்டேய புராணத்தில் உள்ளது. மார்க்கண்டேய சண்டி, சண்டிகா தேவிமகாத்மியம், சப்தசதிசண்டி என்பன தேவி மான்மியத்தின் வேறுபெயர்களாம். இந்நூல் பதின்மூன்று அத்தியாயங்களைக் கொண்டது. இது தேவியினுடைய சரித்திரமும் தோத்திரமும் கூறுவது. இந்நூல் மந்திர நூல்களில் ஒன்றாகக் கருதப்படுகின்றது. இது தன்னைப் பாராயணம் செய்பவர்க்கு விரைவில் சித்தியைக் கொடுக்கின்றது. மலையாளிகளிற் பலர் இந் நூலைத் தங்கள் வேதம்போலவே கருதி நாள்தோறும் படித்து வருகின்றனர். வங்காளிகள் தேவியின் பூசைக் காலங்களிற் படித்துவருகின்றனர். விரைவிற் காரிய சித்தியை விரும்புகின்ற தமிழ் நாட்டினரும் பிறரும் அவ்வப்பொழுது பயின்று வருகின்றனர். நவராத்திரியில் இந்நூல் எல்லா இடங்களிலும் பாராயணம் செய்யப்பட்டு வருகிறது.

எல்லாவற்றிற்கும் மேலானதாகவும், மூலமானதாகவும் உள்ளது பரமசிவமாகிய பரப்பிரமம் ஆகும். சக்திக்கு ஆதாரம் பிரமமே. பிரமத்தை விட்டுச் சக்தி பிரிந்திருப்பது இல்லை. பிரமமும் சக்தியும் கலந்த நிலையிலுள்ள பராசக்தியே படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையும் செய்வதற்குக் காரணமாயுள்ளது. ஆதலினாலேயே சாக்தர்கள் பிரமமாகிய சிவத்துடன் பிரிவின்றி விளங்கும் அச்சக்தியை "தேவி" என்னும் முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபாடு செய்கின்றனர்.

அச்சக்தி நிர்க்குணை, சகுணை என இரண்டு விதமாக நூல்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது. சத்துவம், இராசதம்

தாமதம் என்னும் முக்குணங்களும் ஏற்றக் குறைச்சலில்லா மல் சமமாக விளங்கும் திருமேனி கொண்டுள்ள சக்தியே நிர்க்குணையாம். இச்சக்திக்குச் சண்டிகை, மகாமாயை, மூலப் பிரகிருதி, மகாலட்சுமி எனப் பல பெயர்கள் விளங்குகின்றன. அச்சக்தி தன் முக்குணத்தன்மையால் முத்தொழில்களையும் செய்வதற்கு மூன்று வடிவங்களைக் கொள்கின்றது. அச்சக்தி கொள்ளும் ஒவ்வொரு வடிவத்திலும் மூன்று குணங்களில் இரண்டிரண்டு குணங்கள் அமுங்கிக் கீழ்ப்பட்டிருக்க, ஓரோர் குணமே மேற்பட்டிருக்கும், தாமதகுணமேலீட்டால் ஏனைய இரண்டு குணங்களும் கீழ்ப்பட்டிருக்கத் தோன்றிய சக்திக்கு மகா காளி என்று பெயர். இராசத குணமேலீட்டால் ஏனைய இரண்டு குணங்களும் கீழ்ப்பட்டிருக்கத் தோன்றிய சக்திக்கு மகாலட்சுமி என்று பெயர். சத்துவ குணமேலீட்டினால் ஏனைய இரண்டு குணங்களும் கீழ்ப்பட்டிருக்கத் தோன்றிய சக்திக்கு மகா சரஸ்வதி என்று பெயர். இம் மூன்று சக்தி களும் சகுண சக்திகளாகும். பிரமதேவர் மது, கைடவர்களை நாசம் செய்யும்பொருட்டுத் திருமாலைத் துயில் எழுப்புமாறு மகா காளியைத் தோத்திரம் செய்தார். இவள் திருமாலின் யோக நித்திரையாயிருப்பவள். மகிஷாசுரனைக் கொல்லுவதன் பொருட்டு எல்லாத் தேவ சக்திகளின் அமிசங்களையும் பெற்றுத் தோன்றியவள் மகாலட்சுமி. சும்ப நிசும்பர்கள் என்னும் அசுரர்களை அழிப்பதன்பொருட்டுச் சிவ சக்தியாகிய கௌரியின் திருவுருவத்தினின்றும் தோன்றியவள் மகா சரஸ்வதி.

இந்த மூன்று சக்திகளும் முத்தொழில்களைச் செய்வதன் பொருட்டு மும்மூர்த்திகளுடன் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். தேவிமான்மியம் இம்மூன்று சக்திகளையும்பற்றி விரிவாகக் கூறுகின்றது. சண்டிகைக்கு இம்மூன்று அவதாரங்களே யன்றி நந்தாதேவி, இரக்ததந்திகை, சதாட்சி, துர்க்கை, பீமதேவி, பிராமரி முதலிய வேறு பல அவதாரங்களும் உண்டென்று இந்நூலின் பதினொன்றாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. சண்டிகையென்னும் சர்வமூல சக்தியே எல்லாச் சக்திகளுக்கும் ஆதாரமானதாகையால்

உலகிலுள்ள வேறு எந்த எந்தச் சக்திகளும் இச்சக்திக்குப் புறம்பானதாக இல்லை. தேவிமான்மிய பாராயணப் பயன் முழுவதும் இந்நூலின் பன்னிரண்டாம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. முதல் அத்தியாயத்தில் வந்துள்ள மகாகாளியின் துதிகளும் ஐந்தாம் அத்தியாயத்தில் வந்துள்ள தேவியின் துதிகளும் நாள்தோறும் நியமமாகப் படித்தற் குரியவை. நான்காம் அத்தியாயத்தில் வந்துள்ள மகா லட்சுமியின் துதிகளும், பதினொன்றும் அத்தியாயத்தில் வந்துள்ள நாராயணியின் துதிகளும் ஒவ்வொரு செவ்வாய், வெள்ளி நாட்களிலும் தவருமல் வாசித்தற்குரியனவாம். எல்லாவற்றிற்கும் மூலகாரணமானதும், முன்னிற்பதும், பொதுவானதும் ஆகிய சக்தியை இந்நூல் பரதேவதையாகக் கொண்டு கூறுதலால் சைவ வைணவ சாக்தர் முதலிய எல்லாச் சமயத்தினரும் இந்நூலை வாசித்தற்கு அதிகாரிக ளாவார்களென்று சொல்லப்பட்டிருக்கின்றது,

வடமொழியிலுள்ள தேவிமகாத்மியம் என்னும் நூலைத் தமிழரனைவரும் படித்துப் பயன்பெறுமாறு தென்மொழியிற் கவிகளாகச் செய்தவர் பாலைக்காட்டை யடுத்துள்ள தத்தை மங்கலத்துப் பொன்னப்ப பிள்ளை யென்பவரின் அருந்தவப் புதல்வராகிய **நல்லதம்பிப் பிள்ளை யென்பவராவர்.** இவர், கி. பி. இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந் தவர். இவர் தென்மொழியிலும் வடமொழியிலும் நல்ல புலமைபெற்றவர். தருக்க சங்கிரகம், நியாயப்பிரகாசம், சிவானந்த லகரி முதலிய வடநூல்களைத் தமிழிற் செய்தவர். மற்றும் பாலப்பிரபோத விலக்கணம் சைவசித்தாந்த ரகசியம் முதலிய சில தமிழ் நூல்களையும் இயற்றியுள்ளார். கொங்கு நாட்டிலுள்ள கூனம்பட்டி மாணிக்கவாசகர் மடத்தில் ஆதீன வித்துவானக இருந்து பலருக்குத் தமிழ்மொழியும் வடமொழியும் கற்பித்தவர். இந்நூலின் மூலம்மட்டும் இருந்த கையெழுத்துச் சுவடியை எனக்கு அன்புடன் கொடுத் துதவியவர் என்னுடன் ஈரோட்டில் நெடுநாட்களாக ஒரே கலாசாலையில் தமிழாசிரியராய் இருந்தவரும், எனது அன்புக்கு உரிய நண்பரும், இந்நூலாசிரியரின் புதல்வருமாய் விளங்கிய

தமிழ்ப்புலவர் சிவபாத விருதயப் பிள்ளையவர்களின் மனைவி யாராகிய **பருவதவம்மையாரவர்கள்** ஆவார்கள், அவர் கட்கு எனது நன்றி உரியதாகுக.

யான், இந்நூலைப் பரிசோதித்துச் செப்பம் செய்தற்கும் உரை எழுதுவதற்கும் உதவியாக வடமொழித் தேவிமான்மிய வியாக்கியான நூலினை யான் வேண்டிய அவ்வப்பொழுது படித்துப் பொருள் விரித்துரைத்த ஈரோடை ஆயுர்வேத டாக்டர் ஆகிய பிருமஸ்ரீ அனந்தராம சாஸ்திரியார் முதலிய பெரியோர்கட்கும் எனது மனம் நிறைந்த நன்றி உரியதாகுக. இந்நூலுரை முதலியன எழுதுவதற்கு எனக்கு மிகவும் உப யோகமாக விருந்தவை வடமொழித் தேவிமான்மிய வியாக்கி யானம் (நாகோஜிபட்டீயம்), தேவீ பாகவத வசனம், மகிஷ மர்த்தனிஸ்தவம் தமிழுரை, லலிதா சகஸ்ரநாமம் தமிழுரை, ஸ்ரீ இராமகிருஷ்ண விஜயம் இருபத்து மூன்றுவது தொகுதி முதலியனவாம். நாளுக்குநாள் கலியின் கொடுமை அதிகரித்து வருகின்றது. அதனால் மக்கள் அடைந்துவரும் சங்கடங்கள் மிகப்பல. சங்கடங்களிலிருந்து விடுபடுதற்கு மனிதன் சக்தி யற்றவனாய் இருக்கின்றான்: சங்கடங்களிலிருந்து விடுபட வேண்டுமானால் சக்தியின் அருளைப் பெறுதல்வேண்டும். நிச்சயமாகக் கலியின் கொடுமையை நாசம்செய்து நம்மைக் காப்பாற்றுபவள் தேவியே. அவளை வழிபடின் எல்லாவித மான ஆபத்துக்களும் நம்மை அணுகா. கலிகல்மஷ நாசினி, சர்வாபத்விநிவாரணி என்பன தேவியின் திருநாமங்கள் அல்லவா! நமக்கு இம்மையில் அறம், பொருள், இன்பங்களை அருளுபவளும் அவளே. மறுமையிற் சுவர்க்க முதலிய போகங்களைக் கொடுப்பவளும் அவளே, பந்தங்களிற் சேர்ப் பவளும் விடுவிப்பவளும் அவளே, சக்திக்கு மூலம் சிவ மல்லவா? சிவம் எனும் செம்பொருள்காண விழையின் அதனை அம்மையின் அருள்வழியே காணுதல்வேண்டும். "தாயுடன்சென்று பின் தாதையைக்கூடி" என்பது சாத்திரம். தேவியின் அருளைப் பெறுவதற்குக் கற்பகம்போன்றது இத் தேவிமான்மியம். "மூவுலகத்திலும் தேவிமான்மிய தோத்திரத் திற்குச் சமானமான தோத்திரமில்லை. இத்தோத்திரத்தில் மகிழ்வதுபோல தேவி வேறு எதிலும் மகிழ்வதில்லை" என்று தேவி பாகவதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

இத்தகைய பெருமைசான்ற நூலினை அச்சிற் பதிப் பித்துத் தமிழுலகிற்குப் பயன்படுத்த வேண்டுமென்று கருதிய

யான் வழக்கம்போல அன்னமும், பொருளும் அருளும் அறிவும் ஆதிய எத்திறத்தானும் தமிழுலகிற்குத் தோன்று தொட்டுப் பெரும்பயன் விளைத்துவரும் எங்கள் சைவ ராச தானியாகிய தருமையம்பதியில் சைவச் செங்கோலோச்சி இருபத்தைந்தாவது பட்டத்தில் எழுந்தருளி அரசு வீற்றிருக்கும் குருமூர்த்திகளாகிய **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின்** திரு முன்பை யடைந்து ஆதீனத்திலிருந்து மாதந்தோறும் வெளி வந்து ஞானச் சுடர்பரப்பும் "ஞானசம்பந்தம்" எனும் மாத வெளியீட்டில் வெளியிடற்கு அருள்புரியுமாறு குறையிரந்து விண்ணப்பித்துக் கொண்டேன். ஞானசம்பந்தம் உடைய தாதலின் இந்நூலை ஞானசம்பந்தத்தில் வெளியிடற்குக் கருணை மூர்த்திகள் கருணைபுரிந்ததன் பயனாக ஞானசம்பந் தத்தில் வெளிவந்து இப்பொழுது முற்றுப்பெற்றது. இது குறித்து அடியேன் மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றேன்.

இங்ஙனமே அடியேன் வெளியிடற்கு வைத்திருக்கும் ஏனைய தமிழ்நூல்களையும் ஒவ்வொன்றாக வெளியிடற்கு மேலும் கருணைபுரிய வேண்டுமென்று மகாசந்நிதானத்தின் பொன்னடித் தாமரைகளைப் புந்தியில் வைத்துப் போற்றுவ தல்லாமல் சிறியேனாகிய யான் சந்நிதானத்திற்குச் செய்யும் கைம்மாறு யாதுளது. விரிந்த அறிவினையுடைய பெரியோர் கட்குச் சிறியேனுடைய நூற்பரிசோதனை விஷயத்தில் குறைகள் காணப்படுவதியல்பேயாம். ஆகையினாலே அவர்கள் இந்நூலின்கட் காணும் குறைபாடுகளை அறிவிப்பாராயின் தனிப் புத்தகவடிவில் வெளியிடும்போது திருத்திக்கொள்ளு வேன். "பாலுமாயீற்று" என்றாற்போல இந்நூல் நாள் தோறும் பாராயணம் செய்தற்குரிய சிறந்த நூலாயிருப்ப தோடு தமிழிலக்கியப் பயிற்சி செய்வோர்க்குப் பெரிதும் பயன் செய்யும் நூலாயிருத்தலின் இதனைத் தமிழுலகம் அறிந்து பயன்படுத்திக் கொள்ளுமாக,

இங்ஙனம்,

ஈரோடு,
21—6—52.

**வித்துவான், வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்**
தலைமைத் தமிழாசிரியர்,
செங்குந்தர் ஹைஸ்கூல்,

இவ்வாறு பொருளுணர்த்தலும் அவ்விடைச் சொற்காவதோர் இலக்கணம் என்பது. அவ்வுதாரணம் உரையிற் கொள்ளப்படும். பண்டு கூரியதோர் வாண்மன்: இஃது ஒழியிசை. இன்றோர் குறைவுபாடுடைத்தாயிற்று என்னுஞ் சொல் ஒழிந்தமை தோற்றுவித்து நின்றமை காண்க. (௪)

**விழைவே கால மொழியிசைக் கிளவியென்**
**றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே. (255)**

என் - எனின், இதுவும் அது.

இ - ள்: விழைவின்கண்ணதும், காலத்தின்கண்ணதும், ஒழியிசைக்கண்ணதும் என மூன்று கூற்றதாம் என்ப தில் என்னும் இடைச்சொல் என்றவாறு.

உ - ம்: "வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழியரிவையைப் பெறுகதில் லம்மயானே," இது விழைவு. பெற்றாங் கறிகதில்லம்ம இவ்வூரே என்பது காலம். வருக தில் அம்மவெஞ் சேரி சேர என்பது ஒழியிசை. (௫)

**அச்சம் பயமிலி காலம் பெருமையென்**
**றப்பால் நான்கே கொன்னைச் சொல்லே. (256)**

என் - எனின், இதுவும் அது.

இ - ள்: அச்சத்தின்கண்ணும், பயனின்மைக்கண்ணும், காலத்தின்கண்ணும், பெருமைக்கண்ணும் என அக்கூறு நான்காம் கொன்னைச் சொல் என்றவாறு.

உ. - ம்: 'கொன்முனையிரவூர்' என்பது அச்சம். கொன்னே வந்தான் என்பது பயனின்மை. கொன்வரல்வாடை என்பது காலம். கொன்னூர் துஞ்சினும் என்பது பெருமை. (சு)

எச்சஞ் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்
றப்பா லெட்டே உம்மைச் சொல்லே. (257)

என் - எனின், இதுவும் அது.

இ - ள்: எச்சத்தின்கண்ணதும், சிறப்பின்கண்ணதும் ஐயத்தின்கண்ணதும், எதிர்மறைக்கண்ணதும், முற்றின் கண்ணதும், தெரிநிலைக்கண்ணதும், ஆக்கத்தின்கண்ணதும் என அக்கூறு எட்டாம் உம் என் என்னுஞ்சொல் என்றவாறு.

எச்சம் இறந்தது தழீஇயதும் எதிரது தழீஇயதும் என இருவகைத்து. அவையாவன:- யான் கருவூர்க்குச் செல்வேன் என்றாற்கு யானும் அவ்வூர்க்குப் போதுவல் என்பதும் அவ்வாறு கூறினார்க்கு யானும் உறையூர்க்குப்போதுவன் என்பதூஉம் என இவை. இனிச்சிறப்பு - உயர்வுச் சிறப்பும், இழிவுச்சிறப்பும் என இருவகைத்து. உயர்வு - தேவர்க்கும் வேம்பு கைக்கும் என்பது; ஊர்க்கும் அணித்தே பொய்கை என்பதும் அது. இழிபு - அவ்வூர்ப் பூசையும் புலால் தின்னாது எனவரும். ஐயம் - பத்தும் எட்டும் உள என்பது. எதிர்மறை, கொற்றன் வருதற்கும் உரியன் என்பது. இவ்வெதிர்மறை "அஃறிணை விரவுப்பெய ரியல்புமா றுளவே" எனப் பண்பு பற்றியும் வரும்.

எச்சத்தோடு இதனிடை வேற்றுமையென்னையெனின், அது பிறிதோர் பொருளினைத் தழுவும், இஃது அப்பொருட்டானும் ஒரு கூற்றைத் தழுவும் என்பது. இனிமுற்று - தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார் என்பது. யாதுமூரே, நாளுமன்னன்

புகழுமன்னே என்பனவும் முற்றும்மை. இனி எண், நிலனு நீருந் தீயும் வளியும் ஆகாயமுமெனப் பூதமைந்து என்பது. இனித் தெரிநிலை - நன்றுமன்று தீது மன்று, என்பது "இடைநிகர்த் தது" என்றோர் பொருண்மைத் தெரிவித்து நிற்றலாற் றெரிநிலை என்றாயிற்று. இனி ஆக்கம், நெடியனும் வலியனுமாயினன் என்பது. இஃது எண்ணன்றோவெனின், ஒருபொருடன்னையே சொல்லுதலின் நன்றாயிற்றுப்போலும். மற்றும் இதனகத்து விகற்பமெல்லாம் அறிந்துகொள்க. (எ)

பிரிநிலை வினாவே யெதிர்மறை யொழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
யிருமூன் றென்ப வோகா ரம்மே. (258)

என் - எனின், இதுவும் அதாம்.

இ - ள்: பிரிநிலைப் பொருண்மை, வினாப்பொருண்மை, எதிர்மறைப் பொருண்மை, ஒழியிசைப் பொருண்மை, தெரிநிலைப் பொருண்மை என இவற்றைச் சிறப்புப் பொருண்மையோடு தொகுத்து ஆறு என்று சொல்லுப ஆசிரியர் ஓகாரத்துப் பொருண்மை என்றவாறு.

உ - ம்: பிரிநிலை - அவனோ கொண்டான் என்பது; இஃது இப்போது வினாவாய் நடக்கின்றதென உணர்க. இனி வினா - அவனோ வல்லனோ. இனி எதிர்மறை - யானோகொள்வேன் என்பது. இனியொழியிசை, கொளலோ கொண்டான் என்பது. இனித் தெரிநிலை, நன்றோவன்று தீதோவன்று என்பது இனிச் சிறப்பு.......... (அ)

... ... ... ... (259)

**வினையே குறிப்பே யிசையே பண்பே
எண்ணே பெயரோ டவ்வறு கிளவியுங்
கண்ணிய நிலைத்தே யெனவென் கிளவி.** (260)

என் - எனின், இது பொருள்படுவதொன்றுணர்த்தல் நுதலிற்று.

இ - ள்: முன்னின்ற வினைச்சொல்லைப் பின்வரும் வினைச்சொல்லோடு இயைவித்தலென்னும் பொருண்மையும், குறிப்புப் பொருண்மைக்கண்வரும் உரிச்சொல்லினைப் பின்வரும் சொல்லோடு இயைவித்தலென்னும் பொருண்மையும், இசைப்பொருட்கண் வரும் உரிச்சொல்லினைப் பின்வரும் சொல்லோடு இயைவித்தலென்னும் பொருண்மையும், பண்புப்பொருட்கண் வரும் உரிச்சொல்லினைப் பின்வரும் சொல்லோடு இயைவித்தலென்னும் பொருண்மையும்............



वैखरी रूपमापन्ना चैकमात्रा समन्विता ।
तदक्षरमिदं नाम कला दीर्घाद्दी……ता ॥
त्रिमूर्तिः प्लुतमित्युक्तं द्विमूर्त्या दीर्घमुच्यते ।

இவை முதலானவைகளாற் கண்டுகொள்க. இனி இந்தக் குடிலை முதன் மூன்றும் மேலுளவும் ஒடுங்குமாறு ஞான சித்தியில்,

कुटिला कुण्डली बिन्दुरिच्छाज्ञानक्रियोदितम् ।
चिच्छक्तिर्ज्ञानपरा चिच्छक्तिः कुण्डली परा ॥
तत्क्रियाशक्तिरूपत्वं चिदचिद्बैन्दवं तथा ।
ईच्छाशक्तिर्बैन्दवं तच्चिदचिन्मिश्रमै (कै)रिति ॥
इच्छाज्ञानक्रियाशक्तेः सर्वत्र जगदुद्भवम् ।
इच्छाज्ञानक्रियाशक्तिः पराशक्तिर्लयोदितम् ॥
पराऽपरा द्विधा शक्तिः शिवस्तेजोमयोदितम ।
शिवमत्यन्तसंभिन्नं जातनाशविनाशनम ॥
अणौ महति तद्व्याप्तं सर्वात्मनां लयः प्रभुः ।
जगच्छक्तिमयं व्याप्तं जगच्छक्तिमयं शिवम् ॥
अगदुत्पद्यते शक्तेः शक्तेस्तु परमः शिवः ।

எனவும் பிறவும் வருமாற்றுன் முன்னர்த் தோற்றங் கூறிய வாறே கண்டுகொள்க. இவ்வாறே **மாயையது விந்துவினுற் குண்டலியி னுகும்** என்பதற்கேற்பப் பொருள்கொள்க. ஈண்டு விந்து என்றது **விந்து** சத்தியை. குண்டலியெனினும் குடிலையெனினும் ஒக்கும்; காரிய காரணரூபமாய்த் தம்மின் வியாப்த்தியிருத்தலின். அது முற்கூறியவற்றுள்,

बिन्दुशक्त्योद्भवं माया मोहिनी मोहकारणम् ।

எனவும்,

क्षित्यादिकुटिलान्तानि षट्त्रिंशत्तत्वरूपकम् ।
शिवेच्छया कुटिलोत्पन्नं नादतत्वं प्रधानकम् ॥

எனவும்,

पृथ्व्यादि कुटिलान्तानि तत्वं कुण्डलिनोदयम ।

எனவும் பிறவும் வருமாற்றாற் கண்டுகொள்க. ஈண்டு முத னூலின் உதாகரித்தவாறே பரையிற் றோற்றம் பிறவும் நிராமயதேவர் நூலினுமுள்ளவாறு விரிவினுண்டேயுணர்க. அது,

குண்டலியின் கலைமூவே ளுள்ளே கொண்ட
கூர்தருமூ வேமூல குறியாற்கைக
... ... கிரண்டங்களளவில்
கோடியண்ட முடனளவில் புவனுதிகூரத்
தண்டலறு வாக்கைந் தைங்கலை தாரங்கட்குந்
தகுங் குடிலை வைந்தவமே சதாசிவாதி
பண்டையுரு வுடன்கருமம் பகர்மூவைந்து
... ... வெ புரையெனவும் பகருநூலே
குண்டலினி மூலமொடு மத்திமைசூக் குமமாய்க்
குறிபிறவு மாதார முதலாயத் தோன்றி
எண்டருமைம் பூதவுட லுறுப்பு மாகி
யெழுவன்னங் கலைநூல்கள் யாவுஞ் செய
யையும் படைத்துக் காமிய சத்திகளு
மிகுமாயை தனிலெழுந்த மாயேயமிதுவுங்
கண்டு திரோ தாதியுட னைம்மலபா சங்கள்
கடனுக வளித்துயிர்மூ வகைதானும் படைக்கும்

ஈண்டுப் பிராசாதகலை இருபத்தொன்றென்றது.

शिवान्तास्त्रिंशच्च शिवान्तो विंशत्कला तथा ।

என்பதனுல் அறிக. கருமம் பகர் மூவைந்தென்பது தூல பஞ்சகிருத்தியம் சூக்கும பஞ்சகிருத்தியம் அனுக்கிரக பஞ்ச கிருத்தியம் என்க. குண்டலினியில் ஆணவமலமான மூலந் தோன்றுமென்பது சிருட்டி காலத்தில் ஆன்மாக்கள் தோன்று மளவில் ஆணவ மலமும் வைந்தவற்றிற் றேன்றி ஆன்மாக் களைப் பெந்தித்தலின். அது ஞானசித்தியில்,

पृथिव्यादि शिवान्तानि षट्त्रिंशत्तत्त्वसाधनम् ।
तन्मध्ये बिन्दुतत्त्वार्थे त्रिकोणगुणसम्भवम् ॥

तदग्रोभयकोणैश्च विज्ञानादि त्रिसाधनम् ।
बिन्दु र्भिद्यति नादेन तत्काले त्रीण्यणूद्भवम् ॥
अनादिकाले क्रियात्मानं कुटिला कुण्डलिनां स्थितम् ।
बिन्दुशक्तिविभेदांशे बैन्दवं भावमाचरेत् ॥
तत्काले मलसम्बन्धं तत्सृष्ट्यादि ततोदितम् ।
विज्ञानात्मा चतुर्थश्च प्रलयात्मा त्रिभेदकः ॥
सकलात्मा त्रिभेदश्च तस्मात्रेधादश विधम् ।

இவை முதலானவைகளால் உணர்க. இவ்வாறு அதிலேயே,

आणवं कुटिलाशक्तिमायातत्व मयोदितम् ।
आणवान्मायायोत्पन्नं तद्गुणं तु प्रकाशकम् ॥

எனவும் வரும். இப்படிச் சுத்தமாயையிற் றோன்றியதனேடு வியாப்தமாயிருத்தலின்.........யாணவமலம் ஆன்ம ஞானதிகளைச் சுத்த தத்துவங்களால் வேறு வேருய்ப் பேதிப்பது அது அதிலேயே,

अनाद्यं कुटिली व्याप्तं पाशः पञ्चमलोदितम् ।
नादबिन्दुद्वये नाशे भवे.........पञ्चकम् ॥
शक्तिमध्यस्थ इच्छाज्ञानादिकोद्भवम् ।
आत्मचैतन्यरूपं यत्तज्ज्ञानं नादतत्वकम् ॥
आत्मना क्रियया बद्धं यत्तद्बिन्दुस्वरूपकम् ।
ज्ञानक्रिया समप्राप्तं सादाख्यं तत्त्वसम्भवम् ॥
ज्ञानन्यूनं क्रियाधिक्यं तत्वमीश्वर कारणम् ।
क्रियान्यूनाधिकं योगं रुद्रांशं शुद्धपञ्चकम् ॥
एवमात्मनि सम्भिन्नमाणवे ग्रन्थिरुद्भवम् ।

எனவும் பிறவும் வருமாற்ருன் உணர்க, மாயை குடிலையிற் றேன்றினதாகவும் ஆணவம் மலத்திற்றேன்றினதாகவும் கூறுதலின் பிரகிருதி மாயையோடே கூடிக்கொண்டே தத்துவ தாத்விகங்களுக் கேதுவாமாறுபோல மாயையும் அவ்விரண்டின் சமட்டியிலே தோன்றித் தத்துவ தாத்துவிகங்களுக்குக்

காரணமாம் என்பது முன்னும் கூறினம். இவ்வாறு மூல மலம் சிவாதி பஞ்சகங்களோடே கூடியிருக்கிறதுபோல நாத பிந்து ரூபமான பைந்தவத்திலுஞ் சம்பந்தித்திருக்கும். அது,

आणवान्तर्गतं तत्वं बिन्दुनादकलात्मकम् ।

என முன்னுதாகரித்தவாற்ருனும் விளங்கும். இவ்வாறு சுத்த மாயையோடும் ஆணவம் அவிநாபாவமா யிருத்தலாற் சுத்த மாயா விவேகத்தால் ஆணவ பெந்த நிவிர்த்தியுஞ் சித்தாந்தங் கூறும். அது,

बिन्दोर्विवेके सहसाच्छिद्यते मलकम्बुकम् ।
माया विवेके तु यथा धर्माधर्मतुषक्षयः ॥
रुद्राणुरुक्तः प्रकृते र्विवेके भार्गवागमे ।

என வரும். இனி பஞ்ச வாக்குமைம்பூதாதி காரியாதி களினும் வர்ண மந்திராதிகளினுங் காரணமென்றது,

निवृत्यादि पञ्चमांशे तु षडध्वोत्पत्तिसम्भवः ।

என வருதலின். அந்தக் கலை வடிவமாயிருத்தலானும் அகாராதி பஞ்சவர்ணமான பிரணவ வடிவாயு மற்றுந் தன் சுவரூபமாயிருத்தலானும் என்க. இது மூன்றுங் கூறி னம். இவை கூறவே மற்றச் சிவாதி ஐந்தும் கூறினவாரும். அது,

ஐயமுறு மனமில்லை யையந்தீர
அரிதருபுந் தியுமில்லை அகந்தையில்லை
மெய்யொன்று சிந்தனையாஞ் சித்தமில்லை
மிகுகுணதத் துவமில்லை விட்டவெல்லாம் வினவிற்
பொய்யினன வினினனவாம் புகலுங்காலம்
புகுநியதி கலைவித்தி யராகமொடு புருடன்
எய்துமிவையாறும் விடக்கனவான் சுத்தவித்தையொடு
மீசுர சதாசிவம் விந்துவொடு நாதம்
இன்னவை விட்டிட நனவிற் சுழுத்தியாகும்
இதனாலே யதுவுதவ வியத்த...மதாமாயை

துன்னிருளா யருவாகி யுருவுமாகிச் சொல்லவுறு
... ... தனுகரண புவந போக
மன்னவையா யகிலமுந்தான் படைத்தளித்திட்
டவை மறையா வருளுமவர் வெவ்வேருகப்
பன்னும்யோ னிகளுருவா யைந்து கருமந்தான்
பண்ணவிகார விகார......கை நடத்தும்

என மேல் வருமாற்ருற் காண்க. இவ்வாறு கூறும் நிராமய தேவர் என்னும் வேதாந்தக்குரவர் மதம் பெரும்பான்மையுஞ் சித்தாந்தம் போல வரினும் சிவவேதாந்த மேகான்மவாத பேதத்துப் பரிணும வாதமாகலிற் சித்தாந்தத்திற்குப் பூருவ பக்ஷமான நிமித்த காரண பரிணும மதத்துள் அடங்குமென்க. எனவே இவ்வேதாந்தநூல்ப் பிரணவமட்டிலின்று குரு தரிசனம் பண்ணுகிற தத்துவராயர் முதலியோர் மதமொன்று, அறுபத்தெட்டுத் தத்துவப் பிரதிபாதகம். தூல முதற் பஞ்சப் பிரணவம் அட்டப் பிரணவம் ஷோடசப் பிரணவம் என்னும் பிரணவ பரியந்தம் விரித்துக் குரு தரிசனம் பண்ணுவிக்கிற நிராமயதேவர் முதலியோர் மதமொன்று. அது முப்பத்தாறு தத்துவப் பிரதிபாதகம் என விருவகைப் படும் என்க. பிறவும் உளவேற் காண்க. 24

25. * * *

சித்தியல்பு சொலின்மாயா வாதங்கொண்ட
சீவனெடீ சுரரன்றிச் சித்தாந்தத்து
வைத்தனமே லுளபிறவு மடங்கக் கொண்ட
வகை சிவத்தினெடு மூன்ருமுபாதி யாலிங்
குய்த்துணரிற் ருெம்பதந்தா னற்றறபதந்தா
னென்ருகு மசிபதந்தா னுணர்த்து மொன்ருய்ச்
சத்தியமா யஃதிந்த மூன்றின் மேலாய்ச்
சாதிபிண்டத் தாற்போல வேரு மூன்ருய்

என்பது முன்னர்ப் பரம சைதன்னியத்தின் சத்தி சடமுஞ் சித்துமாமென நிறுத்தவாறே சடதத்துவ சுவரூபங் கூறி

இனிச் சித்துவ சுவரூபங் கூறுதற்கு முதற்கண் அதன் பாகுபாடு கூறுகின்றது. முன்னர்,

कुटिली कुण्डली बिन्दुरिच्छाज्ञानक्रियोदितम् ।
चिच्छक्तिर्ज्ञानपराऽचिच्छक्तिः कुण्डलीपरा ॥
तत्क्रिया शक्तिरूपत्वं चिदचिद्बैन्दवं तथा ।
इच्छाशक्तिर्बैन्दवं तच्चिदचिद्भिर्मिश्रकैरिति ॥

என மூன்ருய்க் கூறியதை ஈண்டு இரண்டென்றதென்னெனின் இச்சா சத்தியிலுண்டான வைந்தவம் கிரியா சத்தியிலுண்டான குண்டலியிற் ருேன்றுதலின் அதனை யதற்குளடக்கி யிரண்டென்றது. அது,

शिवशक्तिर्द्विधा तत्र शिवानन्या चिदात्मिका ।
जडात्मिका शिवादन्या जगत्कारणरूपिणी ॥

என்பதனுல் உணர்க. ஈண்டுச் சித்தென்றது சோபாதிகமாயுள்ள சித்தத்துவங்களை. அது ஒன்ருய்ச் சத்தியமாய் பரப்பிரம்ம சுவரூபமான நிருபாதிக ரூபம் என்னும் பராத்பர சைதன்னியமே. சாதி பிண்டத்தாற் போல வேரு மூன்ருயென மேற்கூறுமாற்ருல் விளங்கும். அவற்றுள் மாயாவாதங் கொண்ட சீவேசுவர லக்ஷணமாவது பிரகடார்த்த விவரணத்தில்,

अनादि रनिर्वाच्या मूलप्रकृतिचिन्मात्रसम्बन्धिनी माया ।
तस्याश्चित्प्रतिबिम्बः ईश्वरः ।
तस्या एव परिच्छिन्नानन्तप्रदेशेषु आवरणमविद्या ।
अविद्याभिधानेषु चित्प्रतिबिम्बा जीवाः ।

எனவும், தத்துவவிவேகத்தில்,

माया प्रतिबिम्ब ईश्वरः अविद्या प्रतिबिम्बाः जीवाः ।

எனவும் சங்க்ஷேப சாரீரகத்தில்,

कार्योपाधिरयं जीवः करणोपाधिरीश्वरः ।

என்ற சுருதியை அனுசரித்து,

अविद्यायां चित्प्रतिबिम्ब ईश्वरः ।
अन्तः करणे चित्प्रतिबिम्बो जीवः ।
अन्तः करणावच्छिन्नं चैतन्यं जीवः तदनवच्छिन्न ईश्वरः ।

எனவும், மற்றும் சிலர்,

न प्रतिबिम्बो न वावच्छेद्यो जीवः यस्पै पराधेयत्ववत् ।
अपितु तस्य ब्रह्मण एव अविद्यया जीवभावः ।
व्याधकुलसंवर्धितराजकुमारस्येव व्याधत्वं तेन तस्यैवाविद्यया संसरति । स्वविद्यया विमुच्यते ।

என பிரகதாரண்ணிய பாடியத்தில் விரித்துரைக்கப்பட்டிருப்பதனுலும்,

राजसूनोः स्मृतिप्राप्तौ व्याधभावो निवर्तते ।
यथैवमात्मनोऽज्ञस्य तत्त्वमस्यादिवाक्यतः ॥

எனப் வார்த்திகத்தில் கூறப்பட்டிருப்பதாலும்,

एवं च स्वाविद्यया जीवभावमापन्नस्यैव ब्रह्मणः सर्वत्र पञ्चकल्पकत्वादीश्वरोऽपि सह सर्वज्ञत्वादिकारणत्वादिधर्मैः स्वप्नोपलब्धदेवतावज्जीवकल्पितः

என்றும் கூறுகின்றனர். அதிலும் சிலர் ஏகஜீவவாதிகள் வேறுசிலர் அநேக ஜீவவாதிகள் எனவரும் லக்ஷண பேதம் பலவற்றுள்ளும் ஈண்டு சுத்த சைவத்திலுட்கொண்டது; ஞானசித்தியில்,

कायोपाधिरयं जीवः कारणोपाधिरीश्वरः ।

என்பதாகலின், அவ்வாறே,

कार्योपाधिरयं जीवः करणोपाधिरीश्वरः ।

எனச் சுருதியும் கூறுதலின், அவ்விலக்ஷணயுக்த சிவேசுவரர்களையே ஈண்டெடுத்ததென்பது தோன்ற **மாயாவாதங் கொண்ட சிவனோடீசுரன்** என்றது. “அன்றி” என்பது உம்மைப் பொருள்பட நின்றது. இனி **சித்தாந்தத்து வைத்தன மேலுள பிறவு மடங்கக் கொண்டவகை சிவத்தினொடு மூன்றும்** என்பது சிவ பேதங்களுள் பிரளயாகலர் விஞ்ஞானகலர் என்னும் பேதங்களும் ஈசுவர பேதங்களுள் மகேசுவர சதாசிவ பிந்து நாத சத்தி சிவதத்துவாதியர்களும் அப்பால் பராசத்தி பரசிவ பராபரை என்னும் சிவபேதங்களும் அடங்கக் கொண்டவகை சிவத்தினொடென்றது. மூன்றென்றது மாயாவாதத்தில் சைதந்நியங்கள் நால்வகையாயு மூவகையாயும் பிறவாற்றானும் பலவாக விரித்தலின் அவையெல்லாமடங்குதற்கு. அவை வருமாறு,

**यथा स्वतः शुभ्रः पटः धौतः । अन्नलिप्तो घट्टितः । मष्याकारयुक्तो लाञ्छितः । वर्णपरिपूरितो रञ्जितः । इत्यवस्था चतुष्टयमेकस्यैव चित्रपटस्य । तथा परमात्मा मायातत्कार्योपाधिरहितः । शुद्धमायोपहितः ईश्वरः अपञ्चीकृतभूतकार्यसमष्टिसूक्ष्मशरीरोपहितो हिरण्यगर्भः । पञ्चीकृतभूतकार्यसमष्टिस्थूलशरीरोपहितो विराट्पुरुषः । इत्यवस्था चतुष्टयमेकस्यैव परमात्मनः । अस्मिंश्चित्रपटस्थानीये परमात्मनि चित्रस्थानीयस्थावरजङ्गमात्मको निखिलः प्रपञ्चः । यथा चित्रार्पितमनुष्याणां, चित्राधारवस्त्रसदृशा वस्त्राभासा लिख्यन्ते तथा परमात्माध्यस्तदेहिनां अधिष्ठानचैतन्यसदृशाः चिदाभासाः कल्प्यन्ते । ते च जीवनामानः संसरन्तीति । अध्यात्मं तु विश्वतैजसप्राज्ञभेदेन त्रीणि रूपाणि । तत्र सुषुप्तौ विलीनेऽन्तःकरणे अज्ञानमात्रसाक्षी प्राज्ञ आनन्दमय इहोक्तः । स्वप्ने समष्टिसूक्ष्मशरीराभिमानी तैजसः । जागरे व्यष्टिस्थूलशरीराभिमानी विश्वः । तत्र माण्डूक्यश्रुतिः । अहमनुभवे प्रकाशमानस्यात्मनो विश्वतैजसप्राज्ञतुर्यावस्थाभेदरूपं पादचतुष्टयं सोऽयमात्मा चतुष्पात् इत्युपक्षिप्य पूर्वपूर्वपादप्रविलापनेन निष्प्रपञ्चब्रह्मात्मकं तुरीयपादप्रतिपत्तिसौकर्याय स्थूलसूक्ष्मसूक्ष्मतरोपाधीन् विराडादीन् विश्वादिष्वन्तर्भाव्य जागरितस्थानो बहिः**

# கோசார பலன்

ஜோதிஷார்ணவம், பிர்மஸ்ரீ. முத்துசோதிடர், திருவிடைமருதூர்.
(நந்தனஹு ஆடிமீ 1உ முதல் 31உ வரையில்)
(16—7—52 முதல் 15—8—52 வரையில்)

**1. மேஷம். அசுவதி, பரணி, கார்த்திகை ¼.**

இம்மேஷ ராசிக்காரர்களில், அசுவதி 2, பரணி 4, கார்த்திகை. 1 பாதக்காரர்கள் மிகுந்த நலனடைவார்கள். வியாபார லாபம், காரியஸித்தி, மேலோர் பெரியோர் நேசம், தெய்வபலம் பிரகாசித்தல், சுபசமாசாரக் கேள்வி. வியவஹார ஜயம், தூர யாத்திரை, அபூர்வ வஸ்து கிடைத்தல், எதிர்பாராத ஸ்தாவர ஜங்கம சொத்து அடைதல், முதலிய சுபங்கள் நடைபெறும். ஷை பாதங்களை த்தவிர இதர பாதம் உடையவர்களுக்கு இம்மாதம், சுபமிராது, மத்யபலனும், சில கஷ்டங்களும்கூட அடைய நேரும். குரு வாரம், புத வாரம், சத்துரு பலனைத் தரும்.

**2. விருஷபம். கார்த்திகை ¾, ரோஹிணி, மிருகசீரிஷம் ½.**

விருஷப ராசி பலன் ஷை 3 நக்ஷத்திரங்களுக்கும், சுபமே தரும், கீர்த்தி தரும், தெய்வசக்தி பிரகாசிக்கும், பந்துமித்ர ஸமாகமம், மேலோர் பெரியோர் அனுக்கிரஹம் கிடைத்தல், வியாபார விருத்தி, தொழில் மேன்மை, மனோல்லாசம், இல்லற சுகம், சத்துருநாசம், ஸர்வகாரிய ஸித்தி, தீர்த்தாடனம், சிவ கேசவ தரிசனம், நஷ்டதன பிராப்தி முதலிய சுபங்கள் ஏற்படும். வெள்ளியும், சனியும் சுபவாரமாகும்.

**3. மிதுனம். மிருகசீரிஷம் ½, திருவாதிரை, புனர்பூசம் ¾.**

புனர்பூசநக்ஷத்திரம் தவிர, இரு நக்ஷத்திரக்காரர்களுக்கும், சுபம் உண்டாகும் வேலைக்காரர்களுக்குச் சம்பள உயர்வு, மேலோர் அன்பு, தெய்வபக்தி, பொதுஜனஸேவை, நன்மதிப்பு.

காரியசித்தி, வியாதிசாந்தி, தொழில் பழக்கம், தூரயாத்திரையால் வெற்றி இவை ஏற்படும். புனர்பூசம் சம்பந்தப்பட்டவர்களுக்குத் தாங்கமுடியாதகஷ்டங்கள். சத்துருவிருத்தி, தொழில் குறை, வியவசாய நஷ்டம். நீச சண்டாளர்களால் கலகம், அபவாதம், குடும்பத்தொல்லை, சோரபயம், வீண் மனஸ்தாபம், பெரியோர் சாபம் முதலிய பலவித சிரமங்கள் ஏற்படும். தெய்வ பலம் பறந்துபோகும், நாஸ்தீகம் ஓங்கும்.

**4. கடகம். புனர்பூசம் $\frac{1}{4}$, பூசம், ஆயில்யம்.**

பூசம் ஆயில்யத்துக்குத் தொழில்விருத்தி, வியவசாய சேர்க்கை, பூவிருத்தி, நஷ்டதனபிராப்தி, நூதன உத்யோக லாபம், கீர்த்திபத்திரம், சேவக ஜனசேர்க்கை, வாஹனவிருத்தி, சுபசந்தோஷ சமாசாரக் கேள்வி, மனோல்லாசம், இல்லறசுகம். காலிகன்றுகள் சேர்க்கை, கட்டடவேலைகள், தோட்டவேலைகள் வியவசாயத்தில் அதிக லாபம் முதலிய நன்மைகள் உண்டாகும். புனர்பூசம் 4-ம்பாதக்காரர்கள் அபவாதத்தையும், நஷ்டத்தையும் அடைவார்கள். புதன் திங்கள் நலனைத்தரும்.

**5. சிம்மம். மகம், பூரம், உத்திரம் $\frac{1}{4}$**

பூரம் 4-ம்பாதமும், உத்திரம் முதல்பாதமும் சுபத்தை விசேஷமாய்த்தராது, நஷ்டத்தையும் விக்னத்தையும் கவலையையும்தரும். மகம் சம்பந்தப்பட்டவரை சுபமாகும். கீழ்த்தர வேலைக்காரர்களும், தொழில்செய்பவர்களும், தரிக்காரர்களும் நலனடைவார்கள். செவ்வாய் வெள்ளி சுபவாரமாகும்,

**6 கன்னி. உத்திரம் $\frac{3}{4}$, ஹஸ்தம், சித்திரை $\frac{1}{2}$.**

இம்மூன்று நக்ஷத்திரக்காரர்களும் சுபமடைவார்கள், அசாத்தியமெல்லாம் சாதிக்கப்படும். வம்சவிருத்தியாகும். சத்துருநாசம் ஏற்படும். ரோக நிவர்த்தியாகும். கீர்த்திபத்திரம் கிடைக்கும். தேவி அருள்கிடைக்கும். வஞ்சகமுடைய சமான ஜனங்களும் பிரபுக்களும் கடவுளால் வஞ்சிக்கப்படுவார்கள்.

எங்கும் கீர்த்தியும் சதா தெய்வசிந்தனையும் சத்கர்மாசரணையும், அசாத்திய சாதனையும் ஏற்படும், வியாழனும் வெள்ளியும் நலன் தரும்.

7. துலாம். சித்திரை ½, சுவாதி, விசாகம் ¾.

இம்மாதமும் விசாக நக்ஷத்திரபலன் ஆபத்தையேதரும். தொழில் நஷ்டம், வேலையாட்களால் தொல்லை, ராஜாங்க நிர்ப் பந்தம், களத்திரபுத்திரபீடை, இல்லறத்தில் விரோதம், கலஹ விருத்தி. வாஹனத்திலிருந்து நழுவுதல் முதலிய சிரமங்களும், சித்திரை. சுவாதி சம்பந்தப்பட்டவர்களுக்கு வெற்றியும், லாபமும், கீர்த்தியும், சத்துருநாசமும், கடன் தீர்தலும். தெய்வ சக்தி பிரகாசித்தலும், தொழில் மேன்மையும், மேலோர் பெரியோர் தரிசனமும், அனுக்கிரஹமும் ஏற்படும். திங்கள் புதன் சுபவாரமாகும்.

8. விருச்சிகம். விசாகம், ¼ அனுஷம், கேட்டை.

விருச்சிக ராசிக்கு விசாகம் மிசிரபலனும், மற்றவை சுபபலனும் தரும். தானதர்ம பலப்பிராப்தி, சமானஜனவரத்து, கிருஷிகாரியவிருத்தி, வாஹனவிருத்தி. காலிகன்று விருத்தி, களத்திர புத்திரசுகம், வியாதிசாந்தி, வியவஹாரஜயம். சந்தோஷம் ஏற்படும். வெள்ளியும் புதனும் சுபவாரமாகும்.

9. தனுசு. மூலம், பூராடம், உத்திராடம் ¼.

இம்மாதமும் தனுராசி பலன் விசேஷ நன்மையையேதரும். ஒவ்வொரு வேலைக்காரர்களும் அதிலதில் வெற்றிபெறுவார்கள். சம்பள உயர்வும், கீர்த்திபத்திரமும் கிடைக்கும். இல்லறசுகம் விருத்தியாகும். சந்தோஷம் ஏற்படும்.

10. மகரம். உத்திராடம் ¾, திருவோணம், அவிட்டம் ½.

மகரம் சம்பந்தப்பட்ட மூன்று நக்ஷத்திரங்களுக்குமே நல்ல மாதமாகும். வெகுநாளாக தீராதநோய் விலகும். கடன்

429

விலகும். சத்துரு அழிவான். தனலாபம் கிடைக்கும். எல்லோருடைய அன்பும் கிடைக்கும். தெய்வபலம் ஏற்படும். மாதத்தின் நடுப்பகுதியில் எதிர்பாராத மனுஷ்யாளுடைய வரத்தும் அளவிடமுடியாத சந்தோஷமும் உண்டாகும். ஆனால் சஞ்சார பலன் குறையாது. அலைச்சலாகவே இருக்கும். மாதக்கடைசியில் உஷ்ணரோகமுண்டாகும், உடனே சமனமடையும். சனியும் புதனும் சுபமாகும்.

## 11. கும்பம். அவிட்டம் ½, சதயம், பூரட்டாதி ¾.

கும்பராசிக்காரர்களுக்கு மூன்று நக்ஷத்திர சம்பந்தமும் நஷ்டபலனையே தரும். மாதக்கடைசியில் ஒருவாரத்தில் சில சௌக்கியங்கள் ஏற்படும். ஆரோக்கியமும், தொழிலில் மேன் மேலும் விருத்தியும் ஏற்படும். இல்லறத்தில் அதிக செலவுகளும், வியவஹார உற்பத்தியும், தொழிலாளிகளாலும், வேலைக்காரர்களாலும் துன்பமும் உண்டாகும். செவ்வாயும் வெள்ளியும் சுபமாகும்.

## 12. மீனம். பூரட்டாதி ¼, உத்திரட்டாதி, ரேவதி.

மீனராசிக்காரர்களுக்குச் சுபமாசமாகும். வியாபாரவிருத்தி, நஷ்ட தனவரத்து, வியவஹார வெற்றி, சத்துரு சரணடைதல், நூதன பிரபு தரிசனம், கீர்த்தி பத்திரம் கிடைத்தல், உத்யோக லாபம், தேவ பிராம்மண பக்தி, சத்கர்மாசரணம், தெய்வபலம் தோன்றுதல், அசாத்தியமெல்லாம் சுலபமாக ஜயித்தல், சத்புத்தி ஏற்படல் முதலிய சுபங்கள் ஏற்படும். வியாழனும் செவ்வாயும் சுபவாரமாகும்.



தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரசுவாமி தேவஸ்தானம் தேவாரவகுப்பு ஆண்டு விழா மேற்படி தேவஸ்தான ஆலயத்தில் 24—6—52 செவ்வாய்க் கிழமை மாலை ஆறுமணிக்குச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது.

குடந்தை திரு. *R.* கந்தசாமி மூப்பனார் B.A., B.L., அவர்கள் தலைமைதாங்கிச் சிறப்பித்தார்கள். தருமபுர ஆதீனப் பல்கலைக் கல்லூரித் துணைத்தலைவர் வித்வான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் தேவாரத்தின் பெருமையை எடுத்துச்சொன்னார்கள். லால்குடி திரு. நடேச முதலியார் அவர்கள் திருமுறை என்பது பற்றிப் பேசினார்கள். தேவாரவகுப்பு மாணவிகள் தேவார உரை யாடல் நிகழ்த்தினார்கள். பரிசுகள் வழங்கப்பெற்றன. தேவஸ் தானக் கட்டளை விசாரணை வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளவர்கள் நன்றிகூற விழா இனிது முடிந்தது.

## மதிப்புரை: "வீட்டெலிகள்"

[ஆசிரியர் கோவைகிழார்; வெளியிட்டோர் கோவைநிலையப் பதிப்பகம்; கிரௌன்சைஸ் 162 பக்கங்கள். விலை ரூ. 1—4—0. தபாற்கூலிதனி.] கோயில் பூனை, காட்டெருமை முதலிய கதைகளை எழுதி உலகிற்குத்தந்த ஆசிரியர் இப்பொழுது வீட்டெலிகளையும் வெளிப்படுத்தியுள்ளார். நூலின் பெயர் வீட்டெலிகள் என்றாலும் மானிட எலிகளின் வரலாற்றினையே அறிவிக்கின்றது. மக்கள் சமூக முன்னேற்றத்தின் பொருட்டே இச்சிறுகதைகள் எழுதப்பட் டுள்ளன என்று ஆசிரியரே இதன் பதிப்புரையில் குறித்துள்ளார் ஆதலின் மக்கள் இதனை வாங்கிப் படித்து ஆசிரியர் குறிக்கோளை நிறைவேற்றுவார்களாக.

பெண்ணின் பொறுமை, ஆணின் தகைமை, தற்காப்பே கற்பு, ஊடல் முடிவுகள் இப்படியா?, விபரீத மாறுதல், பொன்னன் கடிதங்கள், என்ன உலகம் இது?, திருப்திசெய்ய முடிந்ததா?, குண்டுச்சட்டியில் குதிரை ஓட்டம், யாத்திரா மார்க்கம், கொலுவில் திருட்டு, துணைவியின் துறவு, இயல்பான வாழ்க்கை, எங்கே போனோம்?, கத்தியும் கதை கற்பிக்கின்றது, குடும்பக் கோஷம் என்ற பதினாறு தலைப்பில் ஒவ்வொன்றும் சிறுசிறு கதைகளாகத் தொகுக்கப்பெற்றுள்ளன. எளிய தமிழ்; இனிய நடை; உயர்ந்த கருத்துக்கள்; இம் மூன்றும் இந்நூலில் ஒருங்கு அமைந்துள்ளன.

திருக்கழுக்குன்றத்தில்

## திருமுறைப் பெருவிழாவும், சமயவளர்ச்சி மாநாடும்.

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தார், மாணிக்கவாசகர் திருநாளாகிய ஆனிமகத்தை ஒட்டிக் கடந்த ஜூன் 26, 27, 28, 29 ஆகிய நான்கு நாட்களிலும் சென்னையிலிருந்தும் மற்றும் சுற்றுப் புறங்களிலிருந்தும் சுமார் இரண்டாயிரம் அன்பர்கள் திரண்டுநிற்கத் திருக்கழுக்குன்றத்தில் கோயில்வழிபாடு; திரிபுரசுந்தரி திருக்காட்சி; மலைவலமாக யானைமேல் திருமுறை விழா; திருக்கழுக்குன்றத் திருப்பதிகநூல் வெளியீடு; நால்வர் வழிபாடு; மாணிக்கவாசகருக்கு ஊசல்; உச்சிக்கோயில் வழிபாடு. இரண்டுநாள் திருமுறைப் பேரவைகள்; திருமுறை இசையரங்குகள்; தனிச்சொற்பொழிவுகள்; இறுதிநாளில் சமயவளர்ச்சி மாநாடு; மாணிக்கவாசகர் வரலாறு பற்றிய இன்னிசை; விரிவுரை முதலியவற்றைப் பெருஞ் சிறப்பாக நடத்திவைத்தனர்.

திருவள்ளுவரகம் திரு. ப. இராமநாதம் பிள்ளை, ஆசிரியர் திரு. இளவழகனர், திரு. A. கஜபதிநாயகர், திரு. வீ. திருஞான சம்பந்த முதலியார், திரு. இரத்தினசபாபதி நாயகர், சுவாமி அருணகிரிநாதர், தருமபுர ஆதீனத் தமிழ்ப்புலவர் திரு. க. வச்சிர வேல் முதலியார், புலவர் முருகவேள், திருமதி. V. G. பத்மாவதி அம்மையார், திருப்புகழ்மணி திரு. T. M. கிருஷ்ணசாமிஐயர், திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, திருமதி. இராசரத்தினம் அம்மையார், மயிலை திரு. சிவ. முத்து, திரு. மா. சிவகுருநாதபிள்ளை, திரு. சாமி. வேலாயுதனர், திரு. முருக கிருபானந்தவாரியார், திருவாசகமணி திரு. K. M. பாலசுப்பிரமணியம், கூத்தரசு, திரு. சு. இரத்தினவேலர் முதலிய பெரியோர்களும், பேரறிஞர்களும், கலைஞர்களும் கலந்து கொண்டு நிகழ்ச்சிகளைச் சிறப்பித்தனர். வண்ணையம்பதி திருமதி. வள்ளியம்மையம்மையார் விழாவுக்கு வந்திருந்த ஆயிரக்கணக்கான அன்பர்களுக்கு உணவும் சிற்றுண்டியும் கொடுத்து உபசரித்தனர்.

Printed & Published by K. Sundaresa Iyer, Agent, Dharmapuram Adhinam at the Gnanasambandam Press, Dharmapuram, (Mayuram) 9—7—1952.